# (33) கணக்கீடு

## வினாத்தாள் கட்டமைப்பு

**வினாத்தாள் I** - **நேரம் : 02 மணித்தியாலங்கள்**
இவ்வினாத்தாள் பல்தேர்வு வினாக்கள் **30** இனையும் சுருக்கமாக விடையளிக்கும் வினாக்கள் **20** இனையும் உள்ளடக்கியுள்ளது. **எல்லா** வினாக்களுக்கும் விடையளித்தல் வேண்டும். ஒரு வினாவிற்கு **04** புள்ளிகள் வீதம் மொத்தப்புள்ளிகள் **200** ஆகும்.

**வினாத்தாள் II** - **நேரம் : 03 மணித்தியாலங்கள்** (மேலதிக வாசிப்பு நேரம் 10 நிமிடங்கள்)
இவ்வினாப்பத்திரம் **ஆறு** வினாக்களை உள்ளடக்கியது. **முதலாவது மற்றும் இரண்டாவது** வினாக்கள் கட்டாய வினாக்கள் என்பதுடன் ஒரு வினாவிற்கு **40** புள்ளிகள் வீதம் **80** புள்ளிகள் வழங்கப்படும். ஏனைய நான்கு வினாக்களுள் மூன்று வினாக்கள் தெரிவு வினாக்கள் என்பதுடன் ஒரு வினாவிற்கு **40** புள்ளிகள் மொத்தப்புள்ளிகள் **120** ஆகும்.
வினாத்தாள் II இற்கான மொத்தப் புள்ளிகள் = 200

இறுதிப் புள்ளியைக் கணித்தல் = வினாத்தாள் I = 200
வினாத்தாள் II = 200
இறுதிப்புள்ளி = 400 ÷ 4
= 100

### வினாத்தாள் I

**பரீட்சார்த்திகளுக்கான அறிவுறுத்தல் :**
சகல வினாக்களுக்கும் **இவ்வினாத்தாளிலேயே** விடையளிக்கவும்.

---

- இலக்கம் **1** தொடக்கம் **30** வரையிலான வினாக்களுக்கு வழங்கப்பட்டுள்ள விடைகளுள் சரியான விடையினைத் தெரிவு செய்து **விடையின் இலக்கத்தை** புள்ளிக்கோட்டின் மீது எழுதுக.

**1.** வணிக அலகு தொடர்பில் பல்வேறு அக்கறையுடைய தரப்பினரும் அவர்கள் அவ்வாறு அக்கறை காட்டுவதற்கான காரணங்களும் கீழே தரப்பட்டுள்ளன :

| தரப்பினர் | அக்கறை காட்டுவதற்கான காரணங்கள் |
|---|---|
| 1. உரிமையாளர்கள் | A உரிய முறையில் வரிசெலுத்தப்படுகின்றதா என்பதை உறுதிசெய்தல் |
| 2. ஊழியர்கள் | B எதிர்கால விருத்திக்கு தேவையான விடயங்களைத் தீர்மானித்தல் |
| 3. வாடிக்கையாளர்கள் | C தொழில் பாதுகாப்பானதா என்பதை உறுதிசெய்தல் |
| 4. அரசு | D பொருட்கள் சேவைகளை தொடர்ச்சியாகக் கொள்வனவு செய்வதற்கான இயலுமையை உறுதிப்படுத்தல் |
| 5. முகாமையாளர்கள் | E முதலீட்டுக்குப் பொருத்தமான திரும்பல் பெறப்படுவதனை உறுதி செய்தல் |

மேலே தரப்பட்ட ஒவ்வொரு தரப்பினரும் வணிக அலகின் மீது அக்கறை காட்டுவதற்கான காரணங்களை ஒழுங்கு முறையாகக் காட்டும் விடை எது?

(1) B, A, D, E, C (2) B, C, E, A, D
(3) E, C, D, A, B (4) E, C, D, B, A
(5) E, D, C, B, A (............)

**2.** சந்தியா வணிகத்தின் 2018.04.01 இல் இடம் பெற்ற கொடுக்கல் வாங்கல்களில் இரண்டு கீழே தரப்பட்டுள்ளன:

காசுக் கொள்வனவு ரூபா 40 000
கடன் கொள்வனவு ரூபா 60 000

மேலே தரப்பட்ட கொடுக்கல் வாங்கல்களின் தாக்கத்தை சரியாகக் காட்டும் விடையினைத் தெரிவு செய்க.

(1) சொத்து அதிகரித்தல் ரூ. 60 000 - பொறுப்பு குறைவடைதல் ரூ. 60 000
(2) சொத்து அதிகரித்தல் ரூ. 60 000 - பொறுப்பு அதிகரித்தல் ரூ. 60 000
(3) சொத்து அதிகரித்தல் ரூ. 100 000 - பொறுப்பு அதிகரித்தல் ரூ. 100 000
(4) சொத்து குறைவடைதல் ரூ. 100 000 - பொறுப்பு அதிகரித்தல் ரூ. 100 000
(5) உரிமையாண்மை அதிகரித்தல் ரூ. 100 000 - சொத்து அதிகரித்தல் ரூ. 100 000

(............)

**3.** வரையறுக்கப்பட்ட துலானி கம்பனியின் கொள்வனவுப்பட்டியலிலிருந்து பிரித்தெடுக்கப்பட்ட பகுதியொன்று கீழே தரப்பட்டுள்ளது:

| திகதி | விநியோகிப்போர் | பெறுமதி (ரூ.'000) |
|---|---|---|
| 05.04.2018 | வரையறுக்கப்பட்ட பமீதா கம்பனி | 400 |
| | வியாபாரக்கழிவு 10% | (40) |
| | | 360 |
| நிபந்தனை : ஒரு மாதத்தினுள் பணம் செலுத்தப்படுமாயின் 10% கழிவு வழங்கப்படும். | | |

வரையறுக்கப்பட்ட துலானி கம்பனி மேற்குறிப்பிட்ட கொடுக்கல் வாங்கலுக்குரிய பணத்தினை 30.04.2018 இல் செலுத்தியது. கழிவினைப் பதிவு செய்வதற்குரிய சரியான இரட்டைப் பதிவு எது?

| | | வரவு (ரூபா) | | செலவு (ரூபா) |
|---|---|---|---|---|
| (1) | கொடுத்த கழிவுக்கணக்கு | 36 000 | கடன்பட்டோர் கட்டுப்பாட்டு கணக்கு | 36 000 |
| (2) | கடன்கொடுத்தோர் கட்டுப்பாட்டுக் கணக்கு | 36 000 | பெற்ற கழிவுக் கணக்கு | 36 000 |
| (3) | கடன்கொடுத்தோர் கட்டுப்பாட்டுக் கணக்கு | 40 000 | பெற்ற கழிவுக் கணக்கு | 40 000 |
| (4) | கொடுத்த கழிவுக் கணக்கு | 40 000 | கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கு | 40 000 |
| (5) | கடன்கொடுத்தோர் கட்டுப்பாட்டுக் கணக்கு | 76 000 | பெற்ற கழிவுக் கணக்கு | 76 000 |

(............)

**4.** சில்லறைக் காசு முற்பண முறையினைப் (Imprest) பயன்படுத்தும் வணிகமொன்றின் மாதாந்த சில்லறைக் காசு முற்பணத்தின் பெறுமதி ரூபா 5 000 ஆகும். மாத ஆரம்பத்திலேயே முற்பணமானது மீள் நிரப்பப்பட்டுவதுடன் ஜனவரி, பெப்ரவரி ஆகிய இரண்டு மாதங்களுக்குமாக வெவ்வேறாக பிரதம காசாளரினால் சில்லறைக் காசாளருக்கு வழங்கப்பட்டு மீள் நிரப்பிய மொத்தத் தொகை ரூபா 7 400 ஆகும். பெப்ரவரி மாத ஆரம்பத்தில் சில்லறைக் காசாளரின் கையில் ரூபா 600 மீதியாக இருந்ததுடன் ஜனவரி மாத ஆரம்பத்தில் மீள்நிரப்பலுக்கு முன்னர் சில்லறைக் காசாளரிடம் காணப்பட்ட தொகையானது:

(1) ரூபா 1 800 (2) ரூபா 2 000
(3) ரூபா 2 400 (4) ரூபா 3 000
(5) ரூபா 4 400 (............)

**5.** சுமோதன் வணிகத்தின் 31.03.2018 இல் தயாரித்த பரீட்சை மீதியின் மொத்தமானது சமப்படாமையினால் வித்தியாசம் தொங்கல் கணக்கில் பதிவு செய்யப்பட்டு, வரைபு நிதிக்கூற்றுக்கள் தயாரிக்கப்பட்டது. தொங்கல் கணக்கின் மீதி நிதி நிலைமைக் கூற்றில் பதிவு செய்யப்பட்டது.

வரைபு வருமானக் கூற்றில் காட்டப்பட்ட தேறிய இலாபம் ரூபா 140 000 ஆகும். பின்னர் மேற்கொள்ளப்பட்ட பரிசோதனையின்போது பின்வரும் வழுக்களும் விடுபட்டவைகளும் கண்டுபிடிக்கப்பட்டன.

* வெளித்திரும்பல் ரூபா 16 000 கடன் கொடுத்தோர் கட்டுப்பாட்டுக் கணக்கில் மாத்திரம் பதிவு செய்யப்பட்டிருந்தது.
* செலுத்திய வங்கிக் கடன் வட்டி ரூபா 4 000 ஆனது கடன் வட்டிக் கணக்கு மற்றும் காசுக்கணக்கு இரண்டிலும் செலவு வைக்கப்பட்டிருந்தது.
* பதிவழிக்கப்பட்ட அறவிடமுடியாக்கடன் ரூபா 2 000 ஆனது கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கில் பதிவு செய்யப்படவில்லை.

சரியான தேறிய இலாபத்தையும், தொங்கல் கணக்கில் காணப்பட்ட மீதியையும் முறையாகக் காட்டுவது?

| | **சரியான தேறிய இலாபம் (ரூபா)** | **தொங்கல் கணக்கின் மீதி (ரூபா)** |
|---|---|---|
| (1) | 146 000 | 6 000 (செலவு) |
| (2) | 146 000 | 10 000 (வரவு) |
| (3) | 148 000 | 10 000 (செலவு) |
| (4) | 148 000 | 14 000 (வரவு) |
| (5) | 150 000 | 18 000 (செலவு) |

(............)

**6.** மாதவி வணிகத்தின் 31.03.2018 இல் கடன் கொடுத்தோர் கட்டுப்பாட்டுக் கணக்கு மீதி ரூபா 44 000 ஆகக் காணப்பட்டது. அத்திகதியில் கடன்கொடுத்தோர் பட்டியலின் மொத்த மீதியானது கடன் கொடுத்தோர் கட்டுப்பாட்டுக் கணக்கின் மீதியுடன் சமப்படவில்லை.

பின்னர் மேற்கொள்ளப்பட்ட விசாரணையின்போது பின்வரும் காரணங்கள் கண்டுபிடிக்கப்பட்டன.

- காசோலையொன்று மறுக்கப்பட்டமை காரணமாக நிறுவனத்திற்கு கிடைத்த ரூபா 2 000 கழிவினை நீக்குவதற்கான பதிவானது கடன் கொடுத்தோர் கணக்கில் வரவு வைக்கப்பட்டிருந்தது.
- பெற்ற கழிவு ரூபா 5 000, குறித்த கடன்கொடுத்தோரின் கணக்கில் 500 என வரவு வைக்கப்பட்டிருந்தது.
- ரூபா 18 000 கொள்வனவுப் பட்டியலொன்று குறித்த கடன் கொடுத்தோர் கணக்கில் ரூபா 8 000 எனப்பதிவு செய்யப்பட்டிருந்தது.

31.03.2018 இல் **சீராக்கிய கடன் கொடுத்தோர் கட்டுப்பாட்டு கணக்கின் மீதி** மற்றும் **சீராக்கப்பட முன்னர் கடன் கொடுத்தோர் பட்டியலின் மொத்த மீதி** என்பவற்றை முறையாகக் காட்டுவது எது?

(1) ரூபா 42 000, ரூபா 36 500
(2) ரூபா 43 500, ரூபா 58 000
(3) ரூபா 46 000, ரூபா 38 500
(4) ரூபா 48 000, ரூபா 42 500
(5) ரூபா 48 000, ரூபா 53 500 (............)

**7.** சில்லறை வியாபார வணிகமொன்று, குத்தகை முறையின் கீழ் கொள்வனவு செய்த மோட்டார் வாகனமொன்றை நிதி நிலைமைக் கூற்றில் ஆதனம் பொறி மற்றும் உபகரணத்தின் கீழ் இனங்காண்பதற்கு அடிப்படையாக அமைகின்ற கணக்கீட்டு எண்ணக்கரு எது?

(1) அலகு சார் எண்ணக்கரு
(2) பாதுகாப்பு எண்ணக்கரு
(3) தோற்றத்திலும் பார்க்க கருத்து முக்கியத்துவ எண்ணக்கரு
(4) இணைத்தல் எண்ணக்கரு
(5) பண அளவீட்டு எண்ணக்கரு (............)

**8.** கொடுக்கல் வாங்கல்களையும் நிகழ்வுகளையும் அறிக்கையிடும்போது வரலாற்றுக் கிரய எண்ணக்கருவிலிருந்து விலகியிருக்கக் கூடிய சந்தர்ப்பமொன்றாகக் இனங்காணக்கூடியது எது?

(1) LKAS 16 (ஆதனம் பொறி மற்றும் உபகரணம்) நியமத்திற்கேற்ப இயந்திரமொன்றை இனங்கண்டு அளவிடும் போதாகும்.
(2) FIFO முறையில் இருப்பினை மதிப்பிடும் போதாகும்.
(3) LKAS 2 (இருப்பு) நியமத்திற்கேற்ப வருட முடிவில் இருப்பினை மதிப்பிடும் போதாகும்.
(4) ஊழியர் சம்பளத்தினை அறிக்கைப்படுத்தும் போதாகும்.
(5) மீள் விற்பனை செய்யும் நோக்கில் பொருட்களை கடனுக்கு கொள்வனவு செய்யும் போதாகும்.

(............)

**9.** சனத் வணிகமானது மோட்டார் வாகனங்களை வாடகைக்கு வழங்கி வருமானத்தை பெற்று வருகின்றது. 31.03.2018 இலும் 01.04.2017 இலும் காணப்பட்ட மீதிகள் பின்வருமாறு

| | **31.03.2018 இல் (ரூபா)** | **01.04.2017 இல் (ரூபா)** |
|---|---|---|
| பெற்ற வாடகை முற்பணம் | 250 000 | 200 000 |
| பெறவேண்டிய வாடகை வருமானம் | 350 000 | 400 000 |

31.03.2018 இல் முடிவடையும் வருடத்தினுள் பெற்ற மொத்த வாடகை ரூபா 1 300 000 ஆகும். 31.03.2018 இல் முடிவடையும் வருடத்திற்குரிய வாடகை வருமானத்தின் பெறுமதி எது?

(1) ரூபா 110 000
(2) ரூபா 155 000
(3) ரூபா 1 200 000
(4) ரூபா 1 300 000
(5) ரூபா 1 450 000 (.............)

**10.** வரையறுக்கப்பட்ட திலீப் கம்பனியின் 31.03.2018 இல் முடிவடைந்த வருடத்திற்குரிய தகவல்கள் கீழே தரப்பட்டுள்ளன.

| | ரூ.'000 |
|---|---|
| 01.04.2017 இல் வியாபார கொடுக்குமதிகள் | 80 |
| 31.03.2018 வியாபார கொடுக்குமதிகள் | 120 |
| வெளித்திரும்பல்கள் | 230 |
| கொள்வனவுகள் | 9 200 |
| பெற்ற கழிவுகள் | 100 |
| காலம் கடந்த கடனுக்கு விதித்த வட்டி | 40 |

31.03.2018 இல் முடிவடைந்த வருடத்தினுள் வியாபார கொடுக்குமதிகளுக்காக செலுத்திய தொகை எது?

(1) ரூபா 7 700 000
(2) ரூபா 8 790 000
(3) ரூபா 8 870 000
(4) ரூபா 8 970 000
(5) ரூபா 9 200 000 (.............)

**11.** ரவி கம்பனி கிரயத்தில் 25% மொத்த இலாபத்துடன் பொருட்களை விற்பனை செய்கின்றது. 01.04.2017 தொடக்கம் 31.03.2018 வரையிலான நிதியாண்டிற்குரிய தகவல்கள் கீழே தரப்பட்டுள்ளன.

| | | ரூ.'000 |
|---|---|---|
| ஆரம்ப இருப்பு | - | 300 |
| இறுதி இருப்பு | - | 250 |
| கொள்வனவுகள் | - | 1 200 |
| சுங்கத்தீர்வையும் உட்சுமைக் கூலியும் | - | 150 |
| விற்பனையின் அடிப்படையிலான தரகு | - | 200 |

31.03.2018 இல் முடிவடைந்த வருடத்தின் விற்பனையின் பெறுமதி எது?

(1) ரூபா 1 550 000
(2) ரூபா 1 750 000
(3) ரூபா 1 800 000
(4) ரூபா 1 950 000
(5) ரூபா 2 000 000 (.............)

**12.** இலாப நோக்கற்ற வணிகங்கள் தொடர்பிலான பின்வரும் கூற்றுக்களுள் **பிழையானது** எது?

(1) வணிகத்தில் செலவை விட வருமானம் கூடுதலாகக் காணப்படின் அது மிகையாக இனங்காணப்படும்.
(2) வணிகத்தில் மிகைகளின் மூலம் உருவாக்கப்படுகின்ற நிதியானது உரிமையாண்மையின் பகுதியொன்றாகும்.
(3) வணிகத்தில் நிலுவை சந்தா சொத்தாக இனங்காணப்படும்.
(4) வணிகங்கள் தமது விசேட தேவைகளுக்காக வேறு நிதிகளை வைத்திருக்கமுடியும்.
(5) வணிகங்கள் இரட்டைப்பதிவு முறையில் கணக்குகளைப் பேணுவதில்லை. (.............)

- **பின்வரும் தகவல்களைப் பயன்படுத்தி 13 ஆம் 14 ஆம் வினாக்களுக்கு விடையளிக்க.**

சமன் மற்றும் சுதத் பங்குடைமை வணிகத்தின் 31.03.2018 இல் முடிவடைந்த வருடத்திற்கான பங்காளர்களின் நடைமுறைக் கணக்குகள் பின்வருமாறு.

**நடைமுறைக் கணக்கு** **(ரூபா)**

| | சமன் | சுதத் | | சமன் | சுதத் |
|---|---|---|---|---|---|
| | | | 01.04.2017 மீ/வ | 80 000 | 60 000 |
| | | | சம்பளம் | 50 000 | 40 000 |
| | | | மூலதன வட்டி 10% | 30 000 | 20 000 |
| 31.03.2018 மீ/செ | 220 000 | 150 000 | இலாபப் பங்கு | 60 000 | 30 000 |
| | 220 000 | 150 000 | | 220 000 | 150 000 |

**13.** பங்காளரிடையே பங்குடைமை ஒப்பந்தமொன்றை ஏற்படுத்தாது 1890 ஆம் ஆண்டின் பங்குடைமைக் கட்டளைச் சட்டத்தின் 24 ஆம் பிரிவின்படி, இப்பங்குடைமை வணிகம் செயற்படுமாயின் 31.03.2018 இல் முடிவடையும் வருடத்திற்கான சுதத்தின் இலாபப்பங்கு எவ்வளவு?

(1) ரூபா 45 000 (2) ரூபா 70 000 (3) ரூபா 90 000
(4) ரூபா 115 000 (5) ரூபா 185 000 (............)

**14.** 31.03.2018 இல் புதிய பங்காளராக சஹ்றன் இணைத்துக்கொள்ளப்பட்டதுடன் அவர் ரூபா 100 000 வை மூலதனமாக பங்குடமையில் முதலீடு செய்தார். இத்திகதியில் நன்மதிப்பின் பெறுமதி ரூபா 90 000 வாக மதிப்பிடப்பட்டது. சமன், சுதத் மற்றும் சஹ்றன் மூன்றுபேரும் சமமாக இலாப அல்லது நட்டத்தைப் பகிர்ந்து கொள்வதற்குத் தீர்மானித்தனர். நன்மதிப்புக் கணக்கொன்று ஏடுகளில் பேணப்படுவதில்லை என்பதுடன் நன்மதிப்புத் தொடர்பாக சகல சீராக்கங்களும் மூலதனக் கணக்கினூடாக மேற்கொள்ளப்படும். புதிய பங்காளர் இணைக்கப்பட்ட பின்னர் ஒவ்வொரு பங்காளரினது சரியான உரிமையாண்மையினைக் காட்டுவது எது?

| | சமன் (ரூ.) | சுதத் (ரூ.) | சஹ்றன் (ரூ.) |
|---|---|---|---|
| (1) | 300 000 | 20 000 | 100 000 |
| (2) | 330 000 | 200 000 | 70 000 |
| (3) | 330 000 | 230 000 | 130 000 |
| (4) | 360 000 | 320 000 | 100 000 |
| (5) | 550 000 | 350 000 | 70 000 |

(............)

**15.** அமல் மற்றும் கமல் பங்குடைமையின் 31.03.2018 இல் நடைமுறைக் கணக்கின் செலவு மீதிகள் கீழே தரப்பட்டுள்ளன:

- அமல் (ரூபா) 140 000
- கமல் (ரூபா) 120 000

31.03.2018 இல் முடிவடையும் வருடத்தில் நடைமுறைக் கணக்கினைத் தயாரிக்கும்போது பின்வருவன தொடர்பில் எவ்விதச் சீராக்கங்களும் மேற்கொள்ளப்படவில்லை என பின்னர் கண்டுபிடிக்கப்பட்டது. எவ்வாறாயினும் வணிகத்தின் வருமானக் கூற்று சரியாகத் தயாரிக்கப்பட்டிருந்தது.

- கமல் தனது சொந்தக் காசிலிருந்து வணிகத்தின் கட்டட வாடகையாகிய ரூபா 25 000வை செலுத்தியிருந்தார்.
- அமலின் காப்புறுதிக் கட்டணமாகிய ரூபா 12 000 வணிகத்தின் காசிலிருந்து செலுத்தப்பட்டிருந்தது.
- அமல் மற்றும் கமல் என்போரின் சம்பளமாக தலா ரூபா 40 000 நடைமுறைக் கணக்கில் பதிவுசெய்யப்படவில்லை.

மேலே தரப்பட்டவைகளை சீராக்கிய பின்னர் 31.03.2018 இல் அமல் மற்றும் கமல் என்போரின் நடைமுறைக் கணக்கின் சரியான மீதியைக் காட்டுவது எது?

| | அமல் (ரூபா) | கமல் (ரூபா) |
|---|---|---|
| (1) | 148 000 | 205 000 |
| (2) | 168 000 | 185 000 |
| (3) | 205 000 | 123 000 |
| (4) | 205 000 | 148 000 |
| (5) | 205 000 | 275 000 |

(............)

- **பின்வரும் தகவல்களைப் பயன்படுத்தி 16 ஆம் 17 ஆம் வினாக்களுக்கு விடையளிக்க.**

i வரையறுக்கப்பட்ட பொதுக்கம்பனியொன்றின் நிதிநிலைமைக்கூற்றுகளிலிருந்து பெயர்த்தெடுக்கப்பட்ட தகவல்களில் சில பின்வருமாறு:

| | **31.03.2018 ஆம் திகதி** (ரூபா' 000) | **31.03.2017 ஆம் திகதி** (ரூபா' 000) |
|---|---|---|
| கூறப்பட்ட மூலதனம் : சாதாரண பங்குகள் | 4 000 | 3 000 |
| மீள்மதிப்பீட்டு ஒதுக்கம் - காணி | 500 | - |
| பொது ஒதுக்கம் | 1 200 | 1 000 |
| நிறுத்தி வைத்த வருவாய் | 2 500 | 2 000 |

ii 31.03.2018 இல் முடிவடையும் வருடத்திற்கான வருமானவரிச் செலவு, வரிக்கு முன்னரான இலாபத்தில் 10% என மதிப்பிடப்பட்டிருந்தது.

iii 31.03.2018 இல் முடிவடையும் வருடத்திற்காகச் செலுத்திய பங்கிலாபம் ரூபா 200 000 ஆகக் காணப்பட்டதுடன் வருடத்தினுள் நிறுத்தி வைத்த வருவாயிலிருந்து பொது ஒதுக்கத்திற்கு தொகையொன்று மாற்றப்பட்டுள்ளது.

iv கம்பனிக்கு சொந்தமான காணி 31.03.2018 இல் மீண்டும் மீள்மதிப்பீடு செய்யப்பட்டுள்ளது. முன்னைய வருடத்தில் மீள்மதிப்பீட்டின்போது ரூபா 300 000 மீள்மதிப்பீட்டு குறையொன்று அறிக்கையிடப்பட்டிருந்தது. இம் மீள்மதிப்பீடு சரியாகப் புத்தகங்களில் பதிவு செய்யப்பட்டிருந்தது.

**16.** 31.03.2018 இல் முடிவடையும் வருடத்திற்கான இக்கம்பனியின் வரிக்கு முன்னரான இலாபம் எது?

(1) ரூ. 500 000 (2) ரூ. 810 000 (3) ரூ. 900 000
(4) ரூ. 1 000 000 (5) ரூ. 2 500 000 (.............)

**17.** 31.03.2018 இல் முடிவடையும் வருடத்திற்கான கம்பனியின் ஏனைய முற்றுமடங்கிய வருமானம் எது?

(1) ரூ. 200 000 (2) ரூ. 300 000 (3) ரூ. 500 000
(4) ரூ. 800 000 (5) ரூ. 900 000 (.............)

**18.** LKAS 8 (கணக்கீட்டு கொள்கைகள், கணக்கீட்டு மதிப்பீட்டு மாற்றங்கள் மற்றும் வழுக்கள்) நியமத்திற்கேற்ப பின்வருவனவற்றுள் கணக்கீட்டு மதிப்பீடு / மதிப்பீடுகளின் மாற்றமாகக் கருதக்கூடியவை எது/ எவை?

A - சொத்தொன்றின் பயன்படு ஆயுட்காலம்
B - இருப்பின் தேறிய தேறக்கூடிய பெறுமதி
C - ஆதனம், பொறி மற்றும் உபகரணங்களைத் தேய்விடும் முறை

(1) A மாத்திரம் (2) A, B மாத்திரம்
(3) A, C மாத்திரம் (4) B, C மாத்திரம்
(5) A, B, C ஆகியன எல்லாம் (.............)

**19.** பெறுமதி சேர்க்கப்பட்ட வரி (VAT) க்குப் பதிவு செய்யப்பட்டுள்ள வணிகமாகிய வரையறுக்கப்பட்ட சுமுது கம்பனி 01.04.2016 இல் ரூபா 1 725 000 பெறுமதியான இயந்திரமொன்றைக் கொள்வனவு செய்துள்ளது. இப்பெறுமதியினுள் 15% VAT வரியும் உள்ளடங்கியுள்ளது. இவ்வியந்திரத்தின் எஞ்சிய பெறுமதி ரூபா 50 000 ஆகவும், பயன்படு ஆயுட்காலம் 10 வருடங்களாகவும் மதிப்பீடு செய்யப்பட்டது.

LKAS 16 (ஆதனம் பொறி மற்றும் உபகரணம்) நியமத்திற்கேற்ப இவ்வியந்திரத்தின் 31.03.2018 இலுள்ளவாறான கொண்டு செல் தொகை எது?

(1) ரூபா 1 200 000 (2) ரூபா 1 210 000
(3) ரூபா 1 365 000 (4) ரூபா 1 390 000
(5) ரூபா 1 507 500 (.............)

**20.** வரையறுக்கப்பட்ட களனி பொதுக் கம்பனியின் 31.03.2018 இல் முடிவடைந்த வருடத்திற்கான நிதிக் கூற்றுக்கள் பணிப்பாளர் சபையினால் 15.06.2018 இல் அங்கீகரிக்கப்பட்டது. 31.03.2018 தொடக்கம் 15.06.2018 வரையான காலப்பகுதியினுள் பின்வரும் நிகழ்வுகள் கம்பனியில் இடம்பெற்றிருந்தன:

A - 10.05.2018 இல் ஏற்பட்ட தீ விபத்து காரணமாக 31.03.2018 நிறுவனத்தில் காணப்பட்ட பிரதான உற்பத்தி இயந்திரமொன்று அழிவுக்குட்பட்டு ரூபா 500 000 நட்டம் ஏற்பட்டது.
B - 28.02.2018 இல் இடம்பெற்ற கடன் விற்பனையின் காரணமாக உருவான ரூபா 50 000 கடன்பட்டோர் 05.04.2018 இல் முறிவடைந்தவாராக நீதிமன்றம் அறிவித்திருந்தது.
C - ஊழியர் ஒருவரினால் 20.03.2018 இல் நிறுவனத்திற்கு எதிராக தொடரப்பட்ட வழக்கு தொடர்பில் நட்டஈடாக ரூபா 100 000 வை நிறுவனம் செலுத்த வேண்டும் என 20.04.2018 இல் நீதிமன்றம் தீர்ப்பளித்திருந்தது.
D - 31.03.2018 இல் முடிவடையும் வருடத்திற்கு சாதாரண பங்குதாரர்களுக்கு ரூபா 400 000 வை இறுதிப் பங்கிலாபமாக 10.06.2018 இல் பிரகடனப்பட்டிருந்தது.

LKAS 10 (அறிக்கையிடும் காலத்திற்குப் பின்னரான நிகழ்வுகள்) நியமத்திற்கேற்ப 31.03.2018 இல் முடிவடையும் வருடத்திற்கான நிதிக் கூற்றுகளில் சீராக்க வேண்டிய நிகழ்வு/ நிகழ்வுகள் எது/ எவை?

(1) A மாத்திரம் (2) A, B மாத்திரம்
(3) B மாத்திரம் (4) B, C மாத்திரம்
(5) C, D மாத்திரம் (.............)

**21.** LKAS 07 (காசுப்பாய்ச்சல் கூற்று) நியமத்திற்கேற்ப செயற்பாட்டு நடவடிக்கைகள், முதலீட்டு நடவடிக்கைகள் மற்றும் நிதி நடவடிக்கைகள் என்பவற்றிற்குரிய உருப்படிகளை முறையாகக் காட்டுவது எது?

(1) கடன் கொடுத்தோருக்கு காசு செலுத்துதல், பங்குகளைக் கொள்வனவு செய்தல், வங்கிக் கடன்பெறல்
(2) கடன்பட்டோரிடமிருந்து காசு பெறல், பங்குகளைக் கொள்வனவு செய்தல், பங்கிலாபம் பெறல்
(3) வட்டி வருமானம் பெறல், காசு விற்பனை, வங்கியிலிருந்து கடன் பெறல்
(4) காசுக் கொள்வனவு, ஆதனம் பொறி மற்றும் உபகரணங்களின் விற்பனை, கடன் விற்பனை
(5) செயற்பாட்டுச் செலவுகளைச் செலுத்துதல், வங்கிக் கடனைச் செலுத்துதல், ஆதனம் பொறி மற்றும் உபகரணங்களின் கொள்வனவு

(.............)

**22.** வரையறுக்கப்பட்ட பொதுக் கம்பனியொன்றில் பின்வரும் கொடுக்கல் வாங்கல்களும், நிகழ்வுகளும் இடம்பெற்றன:

A - ஒதுக்கத்தை மூலதனமாக்கல்
B - உரிமை வழங்கலொன்று மேற்கொள்ளப்பட்டதுடன், சகல உரிமைகளும் தற்போதுள்ள பங்காளர்களுக்கு வழங்கப்படல்.
C - நிறுத்தி வைத்த வருவாயின் ஒரு பகுதி பொது ஒதுக்கத்திற்கு மாற்றப்படல்.
D - கட்டடம் முதல் முறையாக மீள் மதிப்பீடு செய்யப்பட்டு மிகையொன்று ஏற்படல்.

மேலே தரப்பட்ட கொடுக்கல் வாங்கல்கள் மற்றும் நிகழ்வுகளில் இக்கம்பனியின் உரிமையாண்மையில் அதிகரிப்பை ஏற்படுத்துவதற்கு காரணமாக அமைவன எவை?

(1) A, B மாத்திரம்
(2) B, D மாத்திரம்
(3) C, D மாத்திரம்
(4) A, B, D மாத்திரம்
(5) A, B, C, D ஆகியன எல்லாம்

(.............)

**23.** 31.03.2018 இல் சஹன் கம்பனியின் நடைமுறை விகிதம் 2:1 ஆகும். ஏனைய காரணிகள் மாறாது இருக்கும்போது இவ் விகிதத்தில் **அதிகரிப்பை** ஏற்படுத்தக் கூடிய கொடுக்கல் வாங்கல் பின்வருவனவற்றுள் எது?

(1) கடனுக்குப் பொருட்கள் கொள்வனவு
(2) கடன் கொடுத்தோருக்குக் காசு செலுத்துதல்
(3) நடைமுறை அல்லாப் பொறுப்பினைத் தீர்த்தல்
(4) கடன்பட்டோர் பொருட்களைத் திருப்பியனுப்புதல்
(5) வணிகத்தின் பாவனைக்காக மோட்டார் வாகனமொன்றை கடனுக்குக் கொள்வனவு செய்தல்

(.............)

**24.** வரையறுக்கப்பட்ட சுகன்யா வணிகத்தின் நிதிக் கூற்றுக்களிலிருந்து பிரித்தெடுக்கப்பட்ட தகவல்களில் சில பின்வருமாறு:

| **31.03.2018 இல்** | | **31.03.2018 முடிவடைந்த வருடத்திற்கான** | |
|---|---|---|---|
| | ரூ.'000 | | ரூ.'000 |
| கூறப்பட்ட சாதாரணபங்கு மூலதனம் | 6 000 | விற்பனைக் கிரயம் | 16 000 |
| நிறுத்திவைத்த வருவாய் | 4 000 | மொத்த இலாபம் | 8 000 |
| பொறுப்புக்கள் | 2 000 | | |

வரையறுக்கப்பட்ட சுகன்யா கம்பனியின் மொத்தச் சொத்துக்களின் புரள்வு வீதம் (தடவைகள்) எது?

(1) 0.33
(2) 0.5
(3) 1
(4) 1.33
(5) 2

(.............)

**25.** உற்பத்தி வணிகமொன்றின் கிரய நடத்தையினைக் காட்டுகின்ற பின்வரும் வரைபடங்களில் அலகொன்றிற்கான மாறும் கிரயம் மற்றும் மொத்த மாறும் கிரயக் கோட்டினைக் காட்டும் வரைபடங்களை எவை?

(A)



(B)





(1) A, B, C மாத்திரம் (2) A, B, D மாத்திரம
(3) B, C மாத்திரம (4) B, D மாத்திரம
(5) C, D மாத்திரம (............)

**26.** பின்வரும் உருப்படிகளுள் மேந்தலைக் கிரயங்களை மாத்திரம் உள்ளடக்கியது எது?

A - ஆடைத் தொழிற்சாலையொன்றின் ஆடை தைக்கும் பெண்களின் சம்பளம்
B - பாதுகாப்புச் சேவையினை வழங்கும் நிறுவனமொன்றின் பாதுகாப்பு ஊழியர்களிற்கான சம்பளம்
C - தளபாட உற்பத்தி நிறுவனமொன்றின் முகாமையாளரின் சம்பளம்
D - முடிவுப்பொருட்கள் விற்பனை நிலையமொன்றின் விற்பனை ஊழியருக்கான சம்பளம்
E - பாண் வெதுப்பகமொன்றின் பாண் வேகவைப்பவர்களுக்கான சம்பளம்

(1) A, C மாத்திரம் (2) A, B, C மாத்திரம் (3) B, D மாத்திரம்
(4) B, C, D மாத்திரம் (5) C, D மாத்திரம் (............)

**27.** உற்பத்தி வணிகமொன்று மூலப்பொருள் கட்டுப்பாட்டிற்கு பயன்படுத்துகின்ற ஆவணங்கள் தொடர்பிலான கூற்றுக்கள் கீழே தரப்பட்டுள்ளன:

A - உற்பத்திப் பிரிவினால் களஞ்சியத்திற்கு மூலப்பொருட்களை திருப்பியனுப்புவதற்காக வரவுத்தாள் பயன்படுத்தப்படும்.
B - வழங்குநர்களிடமிருந்து கிடைக்கின்ற மூலப்பொருட்களை பரீட்சித்துப் பொறுப்பேற்பதற்காகப் பயன்படுத்தப்படுகின்ற ஆவணம் பொருள் பெறுவனவுப் பத்திரமாகும்.
C - உற்பத்திப்பிரிவினால் மூலப்பொருட்களை களஞ்சியத்திலிருந்து கோருவதற்கு பொருள் வேண்டுகோள் பத்திரம் வழங்கப்படுகின்றது.
D - மூலப்பொருட்களை கொள்வனவு செய்யுமாறு களஞ்சியத்தினால் கொள்வனவுப் பிரிவிற்கு வழங்கப்படும் ஆவணம் கொள்வனவுக் கட்டளையாகும்.

மேலே தரப்பட்ட கூற்றுக்களுள் சரியான கூற்றுக்கள் எவை?

(1) A , B மாத்திரம் (2) A, B, C மாத்திரம்
(3) A, C மாத்திரம் (4) B, C மாத்திரம்
(5) A, B, C, D ஆகியன எல்லாம் (............)

**28.** பின்வரும் தகவல்கள் PM எனப்படுகின்ற மூலப்பொருள் உருப்படியொன்றுடன் தொடர்புடையதாகும்.

| | | |
|---|---|---|
| வாரமொன்றின் சராசரிப் பாவனை | 40 | கிலோ |
| வாரமொன்றின் இழிவுப் பாவனை | 30 | கிலோ |
| மறு கட்டளைத் தொகை | 280 | கிலோ |

விநியோகக் காலம் 06 - 09 வாரங்கள்

PM மூலப்பொருள் உருப்படியின் **உச்ச மற்றும் இழிவு இருப்பு மட்டங்களை** முறையாகக் காட்டுவது எது?

(1) 360 கிலோ, 120 கிலோ
(2) 360 கிலோ, 150 கிலோ
(3) 375 கிலோ, 180 கிலோ
(4) 550 கிலோ, 120 கிலோ
(5) 550 கிலோ, 150 கிலோ (............)

**29.** உற்பத்திக் கம்பனியொன்றினால் உற்பத்தி செய்யப்படுகின்ற உருப்படியொன்று தொடர்பிலான தகவல்களில் சில பின்வருமாறு:

| | | |
|---|---|---|
| அலகொன்றின் கொள்வனவு விலை | - | ரூபா 125 |
| கட்டளைக் கிரயம் | - | கட்டளையொன்றிற்கு ரூபா 150 |
| அலகொன்றை வைத்திருப்பதற்கான கிரயம் | - | அலகுக்கான கொள்வனவு விலையில் 10% |
| மாதாந்தக் கேள்வி | - | 5000 அலகுகள் |

மூலப்பொருள் உருப்படிக்குரிய சிக்கனக் கட்டளைத் தொகை (EOQ) எது?

(1) 800　　(2) 1 000　　(3) 1 200
(4) 1 500　　(5) 1 600　　(............)

**30.** வணிகமொன்று கவனத்தில் கொண்டுள்ள **X** மற்றும் **Y** ஆகிய இரு முதலீட்டுச் செயற்திட்டங்கள் தொடர்பான தகவல்கள் கீழே தரப்பட்டுள்ளன. இம்முதலீட்டுக்கு நிறுவனத்திடம் காணப்படுகின்ற காசு ரூபா 200 000 ஆகும். நிறுவனத்தின் நியம திரும்பப்பெறும் காலம் ஆகக்கூடியது 03 வருடங்களாகும்.

| | **X செயற்றிட்டம்** | **Y செயற்றிட்டம்** |
|---|---|---|
| ஆரம்ப முதலீடு (ரூபா) | 200,000 | 200,000 |
| திரும்பப்பெறும் காலம் (வருடங்கள்) | 4 | 2 |
| தேறிய நிகழ்காலப் பெறுமதி (ரூபா) | 60,000 | 52,000 |

மேலே தரப்பட்ட செயற்றிட்டங்கள் தொடர்பிலான சில கூற்றுக்கள் கீழே தரப்படுகின்றன.

A - திரும்பப்பெறும் கால முறைக்கேற்ப X செயற்றிட்டத்தை தெரிவு செய்தல் பொருத்தமானது.
B - திரும்பப்பெறும் கால முறைக்கேற்ப Y செயற்றிட்டத்தை தெரிவு செய்தல் பொருத்தமானது.
C - தேறிய நிகழ்காலப் பெறுமதிக்கேற்ப X செயற்றிட்டத்தை தெரிவு செய்தல் பொருத்தமானது.
D - தேறிய நிகழ்காலப் பெறுமதிக்கேற்ப Y செயற்றிட்டத்தைத் தெரிவு செய்தல் பொருத்தமானது.
E - தேறிய நிகழ்காலப் பெறுமதி மற்றும் திரும்பப் பெறும் கால முறைக்கேற்ப இவ்விரு செயற்றிட்டங்களும் பொருத்தமானது.

மேலே தரப்பட்ட கூற்றுக்களில் சரியானவை எவை?

(1) A, C மாத்திரம்　　(2) A, D மாத்திரம்
(3) B, C மாத்திரம்　　(4) B, D மாத்திரம்
(5) E மாத்திரம்　　(............)

- **இலக்கம் 31 வரையான 50 வினாக்களுக்கு சுருக்கமான விடைகளை புள்ளிகள் கோட்டின் மீது எழுதுக.**

**31.** பின்வரும் பேரேட்டுக் கணக்குகள் தொடர்பான கணக்கீட்டு மூலங்களைக் குறிப்பிடுக.

| **கணக்கு** | **மூலங்கள் (Element)** |
|---|---|
| 1. நன்மதிப்பு | .................................... |
| 2. வருமதி சந்தா | .................................... |
| 3. பற்றுக்கள் | .................................... |
| 4. ஊழியர் இழப்பீட்டிற்கான ஏற்பாடு | .................................... |

**32.** கிசான் வணிகத்தின் 2018 ஜனவரி மாதத்திற்கான விற்பனை நாளேடு கீழே தரப்பட்டுள்ளது.

**விற்பனை நாளேடு**

| திகதி | பட்டியல் இலக்கம் | வாடிக்கையாளர் | பெறுமதி ரூ.'000 | VAT ரூ.'000 | மொத்தப் பெறுமதி ரூ.'000 |
|---|---|---|---|---|---|
| 05/01 | 434 | விஷால் | 800 | 120 | 920 |
| 20/01 | 435 | ரஹ்மான் | 600 | 90 | 690 |
| 31/01 | | பொதுப் பேரேட்டிற்கு மாற்றியது | 1 400 | 210 | 1 610 |

ஜனவரி மாதத்தில் விற்பனை நாளேட்டிலிருந்து பொதுப்பேரேட்டிற்கு மாற்றுவதற்கான நாட்குறிப்புப் பதிவினை எழுதுக.

**பொது நாளேடு**

| திகதி | விபரம் | வரவு ரூ.'000 | செலவு ரூ.'000 |
|---|---|---|---|
| ......... | .................................................................................................... | ............ | ............ |
| | .................................................................................................... | ............ | ............ |
| | .................................................................................................... | ............ | ............ |
| | .................................................................................................... | ............ | ............ |

**33.** வரையறுக்கப்பட்ட துமிந்த கம்பனியானது மோட்டார் வாகனங்களை விற்பனை செய்யும் கம்பனி என்பதுடன் 31.03.2018 இல் இக்கம்பனியின் இருப்பின் கிரயம் ரூபா 500 மில்லியனாகும். தொழில்நுட்ப கோளாறு காரணமாக, அதில் உள்ளடக்கப்பட்டிருந்த ரூபா 100 மில்லியன் கிரயம் கொண்ட மோட்டார் வாகனமொன்றின் எதிர்பார்க்கப்பட்ட விற்பனை விலை ரூபா 75 மில்லியனாக மதிப்பிடப்பட்டதுடன், அவ்விலைக்கு அதனை விற்பனை செய்ய வேண்டுமாயின் ரூபா 15 மில்லியன் செலவில் அதனை நவீனமயப்படுத்தவும் வேண்டும்.

(அ) 31.03.2018 இல் இருப்பின் தேறிய தேறத்தக்க பெறுமதியைக் கணிக்க. ரூ. ...................................

(ஆ) இருப்பினைப் பதிவழிப்பதற்கான நாட்குறிப்பு பதிவினை எழுதுக.

**பொது நாட்குறிப்பேடு**

| திகதி | விபரம் | வரவு ரூ. மில்லியன் | செலவு ரூ. மில்லியன் |
|---|---|---|---|
| ......... | .................................................................................................... | ..................... | ..................... |
| | .................................................................................................... | ..................... | ..................... |
| | .................................................................................................... | ..................... | ..................... |
| | .................................................................................................... | ..................... | ..................... |

**34.** பிரசாந்த் வணிகம் 31.03.2018 ல் தயாரித்த பரீட்சை மீதி சமப்படவில்லை. பின்னர் பின்வரும் வழுக்கள் கண்டுபிடிக்கப்பட்டன :

(1) காசுக் கொடுப்பனவு நாளேட்டின் "கழிவு" நிரலின் மொத்தம் ரூபா 6 000 ஆனது பெற்ற கழிவுக் கணக்கிலும், கடன்பட்டோர் கணக்கிலும் செலவு வைக்கப்பட்டிருந்தது.

(2) திலீபனிடம் கடன் கொள்வனவு ரூபா 50 000 ஆனது கடன் கொடுத்தோர் பேரேட்டிலுள்ள அவரது கணக்கில் ரூபா 500 எனப் பதிவு செய்யப்பட்டிருந்தது.

(3) பொது நாளேட்டில் சரியாகப் பதிவு செய்யப்பட்டிருந்த வைப்புச் செய்யப்பட்ட ரூபா 20 000 காசோலையொன்று மறுக்கப்பட்டமை தொடர்பில் கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கில் சரியாகப்பதிவு செய்யப்பட்டிருந்த போதிலும் காசுக் கணக்கில் பதிவு செய்யப்படவில்லை.

31.03.2018 இல் பரீட்சை மீதியின் மொத்தமானது வரவு நிரலிலா அல்லது செலவு நிரலிலா குறைவாகக் காணப்பட்டது என்பதையும் அத்தொகையினையும் தருக.

நிரல் .............................. பெறுமதி ரூ. ..................................

**35.** பின்வரும் தகவல்கள் சுசில் வணிகத்தின் 31.03.2018 இல் முடிவடைந்த வருடத்திற்குரியதாகும்.

| | | ரூ. '000 |
|---|---|---|
| 31.03.2018 | இல் உரிமையாண்மை | 670 |
| 01.04.2017 | இல் சொத்துக்களும் பொறுப்புக்களும் : | |
| | நடைமுறை அல்லாச் சொத்துக்கள் | 500 |
| | நடைமுறைச் சொத்துக்கள் | 50 |
| | மொத்தப் பொறுப்புக்கள் | 185 |
| 31.03.2018 | இல் முடிவடையும் வருடத்தினுள் மேற்கொள்ளப்பட்ட பொருள்பற்று | 50 |
| 31.03.2018 | இல் முடிவடையும் வருடத்தினுள் சுசில் தனது தனிப்பட்ட வங்கிக் கணக்கிலிருந்து மேலதிக மூலதனமாக ரூபா 140 000 இனை முதலிட்டுள்ளார். | |

31.03.2018 இல் முடிவடையும் வருடத்திற்கு வணிகத்தின் இலாபம் : ரூபா ...................................

**36.** வரையறுக்கப்பட்ட மோகன் பொதுக் கம்பனியானது ரூபா 5 000 000 பெறுமதி கொண்ட மோட்டார் வாகனமொன்றை 01.04.2017 இல் வரையறுக்கப்பட்ட களனி பொதுக்கம்பனியிடமிருந்து குத்தகை முறையில் கொள்வனவு செய்தது.
குத்தகைக் காலம் 7 வருடங்களாகும். குத்தகைக் கடன் கொடுப்பனவானது சமமான தவணைகளில் செலுத்தப்படும்.
31.03.2018 இல் செலுத்தப்பட்ட முதலாவது தவணைக் கட்டணம் ரூபா 1 000 000 ஆகும். (இத்தவணைக் கட்டணத்தினுள் வட்டி ரூபா 120 000 வும் உள்ளடங்கியுள்ளது)
இரண்டாவது வருடத்தின் வட்டிச் செலவு ரூபா 100 000 ஆகும்.

மேலே தரப்பட்ட தகவல்களுக்கேற்ப 31.03.2018 இல் வரையக்கப்பட்ட மோகன் பொதுக் கம்பனியின் நிதி நிலைமைக் கூற்றினுள் உள்ளடக்கப்படவேண்டிய பின்வரும் உருப்படிகளின் பெறுமதிகளைத் தருக.

1. நடைமுறை அல்லாத பொறுப்புக்கள் : (ரூபா) ................................
2. நடைமுறை பொறுப்பு : (ரூபா) ................................

- **பின்வரும் தகவல்களைப் பயன்படுத்தி 37 ஆம் 38 ஆம் வினாக்களுக்கு விடையளிக்க.**

வணிகமொன்றின் 31.03.2018 இல் முடிவடைந்த வருடத்திற்கான விற்பனை மற்றும் 31.03.2018 இல் சரக்கிருப்பு என்பவற்றின் பெறுமதி முறையே ரூபா 2 500 000 ம் ரூபா 150 000 எனத் தெரியவந்துள்ளது. இவற்றின் பெறுமதிகளைக் கணிப்பிடும்போது பின்வரும் தகவல்கள் கவனத்தில் கொள்ளப்படவில்லை:

1. 2018 மார்ச் மாதத்தில் 'விற்பனை அன்றேல் திருப்புக' எனும் அடிப்படையில் ரூபா 125 000 பட்டியல் விலை கொண்ட பொருட்கள் அனுப்பப்பட்டிருந்தன. இவ்விற்பனை தொடர்பில் எப்பதிவுகளும் ஏடுகளில் பதிவு செய்யப்படவில்லை. அந்த இருப்பில் 50% மாத்திரம் 31.03.2018 இல் விற்பனை செய்யப்பட்டிருந்ததுடன், விற்பனை விலையானது கிரயத்தில் 25% இலாபம் சேர்த்து தீர்மானிக்கப்பட்டிருந்தது. இப்பொருட்களைத் திருப்பியனுப்பவேண்டிய காலம் முடிவடைந்திருக்கவில்லை.
2. 31.03.2018 இல் களஞ்சியத்தில் காணப்பட்ட இருப்பின் கிரயம் ரூபா 250 000 ஆகும்.

**37.** 31.03.2018 இல் முடிவடையும் வருடத்தில் வருமானக் கூற்றில் காட்டவேண்டிய விற்பனை வருமானம் ரூபா .............................

**38.** 31.03.2018 இல் நிதிநிலைமைக் கூற்றில் காட்டவேண்டிய இருப்பின் பெறுமதி ரூபா .............................

**39.** 31.03.2018 இல் முடிவடைந்த மூன்று மாதங்களுக்கான தளபாடங்களை உற்பத்தி செய்யும் நிறுவனமொன்றின் தகவல்கள் கீழே தரப்படுகின்றன.

| | ரூபா |
|---|---|
| பலகைகளின் கொள்வனவு (1000 சதுர அடிகள்) | 250 000 |
| பயன்படுத்திய நிறப்பூச்சுக்களுக்கான கிரயம் | 30 000 |
| பயன்படுத்திய மணற் கடதாசிகளுக்கான கிரயம் | 5 000 |
| தச்சர்களின் சம்பளம் (ஒரு தளபாடத்திற்கு) | 1 500 |
| உற்பத்தி இயந்திரத்தின் கிரயம் | 800 000 |

இயந்திரத்தின் பயன்படு ஆயுட்காலம் 20 வருடங்கள் ஆகும். எஞ்சிய பெறுமதி எதுவுமில்லை.

01.01.2018 இல் மூலப்பொருள் இருப்பு எதுவும் காணப்படவில்லை என்பதுடன், 31.03.2018 இல் எஞ்சியிருந்த பலகைகளின் இருப்பு 200 சதுர அடிகளாகும்.
தொழிற்சாலைக்கான வருடாந்த வாடகைக் கட்டணம் ரூபா 60 000 ஆகும். தளபாடமொன்றை உற்பத்தி செய்வதற்கு 10 சதுர அடிப்பலகைகள் பயன்படுத்தப்படுகின்றன.
31.03.2018 இல் முடிவடையும் மூன்று மாதங்களுக்கான மூலக்கிரயம் மற்றும் உற்பத்தி மேந்தலைக் கிரயம் என்பவற்றைக் கணிக்க.

1. மூலக்கிரயம் ரூபா ............................
2. உற்பத்தி மேந்தலைக் கிரயம் ரூபா .............................

**40.** வரையறுக்கப்பட்ட சசினி கம்பனியின் நிதிநிலைமைக் கூற்றின் பிரித்தெடுப்பு கீழே தரப்பட்டுள்ளது :

(A) ⟶ வரையறுக்கப்பட்ட சசினி கம்பனி
(B) ⟶ 31.03.2018 இல்
நிதிநிலைமைக் கூற்று

(ரூ.'000)

| | | |
|---|---|---|
| (C) ⟶ **நடைமுறை அல்லாச் சொத்துக்கள்** | | |
| ஆதனம் பொறி மற்றும் உபகரணம் | | xxx |
| **நடைமுறைச் சொத்து** | | |
| இருப்பு | | xxx |
| (D) ⟶ வியாபார வருமதிகள் | | xxx |

மேலே A, B, C மற்றும் D ஆகிய எழுத்துக்களின் மூலம் காட்டப்பட்டுள்ள உருப்படிகளுக்கு அடிப்படையாகவுள்ள கணக்கீட்டு எண்ணக்கருக்களைத் தருக.

| **குறியீடு** | **எண்ணக்கரு** |
|---|---|
| A | ---------------------------------------- |
| B | ---------------------------------------- |
| C | ---------------------------------------- |
| D | ---------------------------------------- |

**41.** வினோத், சிந்து மற்றும் மாலா என்போர் மொத்த மூலதனமாக ரூபா 1 200 000 இட்டு 31.03.2017 இல் பங்குடைமை வணிகமொன்றை ஆரம்பித்ததுடன் 31.03.2018 இல் முடிவடைந்த வருடத்திற்கான பங்காளர்களின் நடைமுறைக் கணக்கு கீழே தரப்பட்டுள்ளது :

நடைமுறைக் கணக்கு (ரூபா)

| | வினோத் | சிந்து | மாலா | | வினோத் | சிந்து | மாலா |
|---|---|---|---|---|---|---|---|
| மீ/கீ/வ | - | 15 000 | - | மீ/கீ/வ | 20 000 | - | 30 000 |
| | | | | சம்பளம் | 40 000 | 40 000 | 40 000 |
| பற்றுக்கள் | 20 000 | - | - | மூலதன வட்டி | 50 000 | 40 000 | 30 000 |
| | | | | இலாபப் பங்கு | 60 000 | 40 000 | 20 000 |
| மீ/கீ/செ | 150 000 | 105 000 | 120 000 | | | | |
| | 170 000 | 120 000 | 120 000 | | 170 000 | 120 000 | 120 000 |

பின்வருவனவற்றைக் கணிக்க.

1. மூலதன வட்டி வீதம் ....................................................
2. 31.03.2018 இல் முடிவடையும் வருடத்திற்கான பங்குடைமையின் தேறிய இலாபம் ரூபா ..........................................
3. 31.03.2018 இல் உள்ளபடியான பங்குடைமையின் தேறிய சொத்துக்கள் ரூபா .............................................

**42.** இலங்கை நிதி அறிக்கைப்படுத்தல் நியம இலக்கம் (SLFRS) 15க்கு (வாடிக்கையாளர்களுடனான ஒப்பந்தங்களின் மூலம் உருவாகின்ற வருமானம்) ஏற்ப வருமானங்களை இனங்காணும்போது பின்பற்றவேண்டிய 05 படிமுறைகளை ஒழுங்குமுறையாகத் தருக.

1. ..........................................................................................................................................
2. ..........................................................................................................................................
3. ..........................................................................................................................................
4. ..........................................................................................................................................
5. ..........................................................................................................................................

**43.** வரையறுக்கப்பட்ட ரேணுகா பொதுக்கம்பனியானது 01.04.2018 இல் வியாபார நடவடிக்கைகளை ஆரம்பித்து பங்கொன்று ரூபா 25 வீதம் 400 000 சாதாரண பங்குகளை ஆரம்ப வழங்கல் செய்தது. 500 000 பங்குகளுக்கு விண்ணப்பத்துடன் காசு கிடைக்கப்பெற்றது. சகல விண்ணப்பதாரிகளுக்கும் விகிதாசார அடிப்படையில் பங்குகள் ஒதுக்கம் செய்யப்பட்டதுடன், மேலதிகப் பணம் திருப்பி அனுப்பப்பட்டது.

(அ) விண்ணப்பங்களுக்கு காசு கிடைத்தல், மேலதிகமான கிடைக்கப்பெற்ற காசினை திருப்பியனுப்புதல் என்பவற்றைப் பதிவு செய்வதற்குத் தேவையான நாட்குறிப்புப்பதிவுகளை எழுதிக்காட்டுக.

(ரூ.'000)

| விபரம் | வரவு | செலவு |
|---|---|---|
| 1. ................................................................................................<br>................................................................................................<br>(விண்ணப்பத்துடன் காசு கிடைத்தல்) | ..................<br>.................. | ..................<br>.................. |
| 2. ................................................................................................<br>................................................................................................<br>(மேலதிக காசை திருப்பியனுப்புதல்) | ..................<br>.................. | ..................<br>.................. |

(ஆ) 01.04.2018 இல் கூறப்பட்ட சாதாரண பங்கு மூலதனக் கணக்கின் மீதி எவ்வளவு?
ரூபா ..................................................

**44.** உற்பத்திக் கம்பனியொன்று மூலப்பொருள் உருப்படியொன்றை விநியோகிப்பதற்கான விலையிடலாக 'முதல் - உள் - முதல் - வெளி' முறை (FIFO) யினை பயன்படுத்துகின்றது. 2018 மார்ச் மாதத்திற்கான அம்மூலப்பொருள் உருப்படியொன்றுடன் தொடர்புடைய தகவல்கள் கீழே தரப்படுகின்றன.

| திகதி | விபரம் | தொகை (அலகுகள்) | அலகொன்றின் விலை (ரூ.) |
|---|---|---|---|
| 01.03.2018 | மீதி | 600 | 12 |
| 12.03.2018 | கொள்வனவுகள் | 1000 | 10 |
| 15.03.2018 | விநியோகம் | 800 | ? |
| 20.03.2018 | கொள்வனவுகள் | 1000 | 11 |
| 28.03.2018 | விநியோகம் | 900 | ? |

இந்த உற்பத்திக் கம்பனியில் :

(அ) 2018 மார்ச் மாதத்தில் உற்பத்திக்காக விநியோகிக்கப்பட்ட பொருட்களின் கிரயம் ரூபா ..........................

(ஆ) நிறையிடப்பட்ட சராசரி முறையினை (WAC) பின்பற்றியிருப்பின் 2018 மார்ச் 31 இல் காணப்பட்ட இருப்பின் கிரயம் ரூபா ...................................

**45.** வணிக நிறுவனமொன்றின் ஊழியர்களின் சம்பளம் தொடர்பான தகவல்கள் கீழே தரப்பட்டுள்ளன.

- ஊழியர் சேமலாப நிதி (EPF) க்கான ஊழியர் மற்றும் வேலை கொள்வோரின் பங்களிப்பு முறையே 10%, 15% ஆகும்.

| | **31.03.2018 இல்**<br>ரூபா | **01.03.2018 இல்**<br>ரூபா |
|---|---|---|
| செல்மதி ஊழியர் சேமலாப நிதி (EPF) | 150 000 | 125 000 |
| ஊழியர் கடன் கணக்கு - சமன் | 90 000 | 100 000 |

மேலதிகத் தகவல்கள் :

(1) சமனுக்கு 28.02.2018 இல் வட்டியின்றி கடன் வழங்கப்பட்டுள்ளதுடன், அதன் முதலாவது தவணைக் கட்டணம் 2018 மார்ச் மாதச் சம்பளத்திலிருந்து அறவிடப்பட்டது.

(2) ஊழியர் சேமலாப நிதியானது (EPF) அடுத்து வரும் மாதத்தின் 05 ஆம் திகதி செலுத்தப்படும்.

(3) EPF ஆனது மொத்தச் சம்பளத்தில் கணிக்கப்படுகிறது.

31.03.2018 இல் முடிவடைந்த மாதத்திற்கான பின்வருவனவைகளைக் கணிக்குக.

(அ) ஊழியர் சேமலாப நிதிச் (EPF) செலவு ரூபா .....................

(ஆ) தேறிய சம்பளம் ரூபா ...................................

**46.** தளபாடம் உற்பத்தி செய்யும் நிறுவனமொன்றின் வெட்டுதல் மற்றும் முடிவுறுத்தல் எனும் இரு உற்பத்திப் பகுதிகளினதும் சேவைப்பகுதி களஞ்சியச் சாலையினதும் பாதிடப்பட்ட மேந்தலைக் கிரயமும் மற்றும் ஏனைய தகவல்களும் கீழே தரப்பட்டுள்ளன.

| | வெட்டுதல் | முடிவுறுத்தல் | களஞ்சியம் |
|---|---|---|---|
| உற்பத்தி மேந்தலைக்கிரயம் (ரூபா'000) | 1450 | 1150 | 100 |
| வேலைசெய்யும் மணித்தியாலங்கள் | 500 இயந்திர மணித்தியாலங்கள் | 600 நேர் ஊழிய மணித்தியாலங்கள் | – |

மேலதிகத் தகவல்கள் :

(1) களஞ்சியப்பிரிவின் கிரயமானது வெட்டுதல், முடிவுறுத்துதல் பகுதிகளிடையே சமமாகப் பகிரப்படல் வேண்டும்.

(2) அலுமாரியொன்றை உற்பத்தி செய்வதற்கான மூலக்கிரயம் ரூபா 9 000 ஆகும்.

(3) அலுமாரியொன்றை உற்பத்தி செய்யும்போது வெட்டுதல் பகுதியின் 02 இயந்திர மணித்தியாலங்களும் முடிவுறுத்தல் பகுதியின் 05 நேர் ஊழிய மணித்தியாலங்களும் தேவைப்படுகின்றது.

பின்வருவனவற்றைக் கணிக்க :

(அ) மேந்தலைக் கிரய உறிஞ்சல் வீதம் :
- வெட்டுதல்பகுதி (இயந்திர மணித். அடிப்படையில்) ரூ. ..............................................
- முடிவுறுத்துதல் பகுதி (நேர் ஊழிய மணித். அடிப்படையில்) ரூ. ................................................

(ஆ) அலுமாரியொன்றின் மொத்த உற்பத்திக்கிரயம் ரூ. ................................................

**47.** வரையறுக்கப்பட்ட பவானி கம்பனி தொடர்பான தகவல்கள் கீழே தரப்பட்டுள்ளன.

| விபரம் | ரூ.'000 |
|---|---|
| 31.03.2018 இல் முடிவடைந்த வருடத்திற்கான இலாபம் | 1 000 |
| 2018 ம் வருடத்திற்குச் செலுத்தப்பட்ட இடைக்கால பங்கிலாபம் | 600 |
| 31.03.2018 இல் கூறப்பட்ட சாதாரண பங்கு மூலதனம் | 4 000 |
| 01.04.2017 இல் நிறுத்தி வைத்த வருவாய்கள் | 3 000 |
| 31.03.2018 இல் முடிவடைந்த வருடத்திற்கான வட்டிச்செலவு | 300 |
| 31.03.2018 இல் முடிவடைந்த வருடத்திற்கான வருமானவரிச் செலவு | 200 |

பின்வருவனவற்றைக் கணிக்க :

(அ) வட்டிக் காப்பு விகிதம் (தடவைகள்) .........................................

(ஆ) உரிமையாண்மை மீதான திரும்புதல் விகிதம்
(வருட முடிவிலுள்ள உரிமையாண்மையின் அடிப்படையில்) ............................................

**48.** நிர்மலன் உற்பத்திக் கம்பனியின் ஒன்று சேர்த்தல் மற்றும் முடிவுறுத்தல் பகுதிகளுக்குரிய தகவல்கள் பின்வருமாறு.

| | ஒன்று சேர்த்தல் பகுதி | முடிவுறுத்தல் பகுதி |
|---|---|---|
| அலகொன்றை உற்பத்தி செய்வதற்கு தேவையான மணித்தியாலங்கள் | 4 இயந்திர மணித்தியாலங்கள் | 5 நேர் உழைப்பு மணித்தியாலங்கள் |
| மேந்தலை உறிஞ்சல் வீதம் | இயந்திர மணித்தியாலத்திற்கு ரூ. 60 | நேர் உழைப்பு மணித்தியாலத்திற்கு ரூ. 10 |

அலகொன்றிற்கான மூலக்கிரயம் ரூபா 710 ஆகும்.

கம்பனியானது உற்பத்திக் கிரயத்தில் 50% இலாபத்தினை சேர்த்துக்கொள்கின்றது.
வருடாந்த உற்பத்தியல்லாத மேந்தலைக்கிரயம் ரூபா 1 200 000 ஆகும்.
வருடாந்த உற்பத்தி மற்றும் விற்பனை 200 அலகுகள் ஆகும்.

பின்வருவனவற்றைக் கணிக்குக :

(அ) அலகொன்றிற்கான உற்பத்திக் கிரயம் ரூபா ...............................

(ஆ) அலகொன்றிற்கான இலாபம்/ நட்டம் ரூபா ...............................

**49.** குறிப்பிட்ட நிறுவனமொன்று 'P' எனும் பொருளினை உற்பத்தி செய்து விற்பனை செய்கின்றது. அப்பொருளின் 32 000 அலகுகளை விற்பனை செய்யும்போது நிறுவனத்தின் மொத்தப் பங்களிப்பானது நிலையான கிரயத்திற்கு சமமாக காணப்படுகிறது. உற்பத்தியானது 40 000 அலகுகளிற்கு மேலதிகமாக உற்பத்தி செய்யும்போது ரூபா 60 000 மேலதிக நிலையான கிரயத்தை ஏற்க வேண்டியிருக்கும். 42 000 அலகுகள் மட்டத்தில் நிலையான கிரயமானது ரூபா 220 000 ஆகும்.

(அ) 32, 000 அலகுகளை உற்பத்தி செய்யும்பொது நிறுவனத்தின் நிலையான கிரயம்
ரூ. ..............................................

(ஆ) 50,000 அலகுகள் உற்பத்தி செய்து விற்பனை செய்யப்படுமாயின் இலாபம் அல்லது நட்டம்
ரூ. ..............................................

**50.** ‘சாரங்கன் புத்தக வெளியீட்டாளர்கள்’ 31.03.2018 இல் ரூபா 180 000 கொண்டு செல் மீதி கொண்ட பழைய அச்சிடல் இயந்திரத்தை விற்பனை செய்து, புதிய இயந்திரமொன்றைக் கொள்வனவு செய்வதற்கு எதிர்பார்க்கின்றனர். பழைய இயந்திரத்தின் சந்தைப்பெறுமதி ரூபா 150 000 ஆகும். புதிய இயந்திரத்தின் கொள்வனவு விலை ரூபா 600 000 ஆகும். புதிய இயந்திரத்தின் பயன்படு ஆயுட்காலம் 5 வருடங்கள் எனவும் அக்காலமுடிவில் அதன் எஞ்சிய பெறுமதி ரூபா 100 000 எனவும் மதிப்பிடப்பட்டுள்ளது.

(ஆ) இம்முதலீட்டினை மதிப்பீடு செய்யும்போது கவனத்தில் கொள்ள வேண்டிய காசுப்பாய்ச்சல் உருப்படிகள் **இரண்டைப்** பெறுமதிகளுடன் பட்டியலிடுக.

..............................................................................................................................................................

..............................................................................................................................................................

(ஆ) இம்முதலீட்டினை மதிப்பிடும்போது கவனத்தில் கொள்ளப்படாத காசுப்பாய்ச்சல் அல்லாத இரு உருப்படிகளை பெறுமதிகளுடன் பட்டியலிடுக.

..............................................................................................................................................................

..............................................................................................................................................................

* * *

# (33) கணக்கீடு

## பகுதி - II

**அறிவுறுத்தல்கள் :**

* **முதலாம், இரண்டாம்** வினா உட்பட **ஐந்து** வினாக்களுக்கு விடையளிக்க.

**1.** கையடக்கத் தொலைபேசிகளையும் மற்றும் கணினிகளையும் விற்பனை செய்யும் வணிகமான வரையறுக்கப்பட்ட "திவ்யா" பொதுக்கம்பனியின் 31.03.2018 இன் பரீட்சை மீதி பின்வருமாறு.

| விபரம் | வரவு (ரூ.'000) | செலவு (ரூ.'000) |
|---|---|---|
| ஆதனம் பொறி மற்றும் உபகரணங்கள் - கிரயம் | 30 000 | |
| 01.04.2017 இல் இருப்பு | 1 000 | |
| கொள்வனவுகள் | 23 000 | |
| வியாபார வருமதிகள் | 12 200 | |
| விநியோகச் செலவுகள் | 1 000 | |
| நிர்வாகச் செலவுகள் | 3 800 | |
| ஏனைய செலவுகள் | 550 | |
| வங்கிக் கடன் வட்டி | 450 | |
| சம்பளங்கள் | 2 000 | |
| வருமான வரி | 1 600 | |
| பெறுமதி சேர்க்கப்பட்ட வரி (VAT) | 500 | |
| பங்குலாபம் | 800 | |
| கட்டட வாடகை | 1 200 | |
| மூன்றுமாத திறைசேரி உண்டியல் (31.03.2018 இல் கொள்வனவு செய்தது) | 1 000 | |
| காசு | 3 500 | |
| விற்பனைகள் | | 34 500 |
| 20% வங்கிக் கடன் | | 2 000 |
| வியாபார வருமதிகளில் எதிர்பார்க்கப்படும் நட்டத்திற்கான ஒதுக்கீடு | | 500 |
| ஆதனம் பொறி மற்றும் உபகரணங்கள் - திரண்ட தேய்வு (01.04.2017 இல்) | | 3 300 |
| கூறப்பட்ட மூலதனம் - சாதாரண பங்குகள் | | 23 000 |
| மீள்மதிப்பீட்டு ஒதுக்கம் (01.04.2017 இல்) | | 3 000 |
| நிறுத்திவைத்த வருவாய்கள் (01.04.2017 இல்) | | 5 500 |
| செலுத்தவேண்டிய ஊழியர் சேமலாப நிதி (EPF) - ஊழியர் பங்களிப்பு | | 200 |
| வியாபார கொடுக்குமதிகள் | | 4 500 |
| குத்தகைக் கடன் கொடுத்தோர் | | 5 700 |
| 01.04.2017 இல் வருமானவரி ஏற்பாடு (31.03.2017 இல் முடிவடைந்த வருடத்திற்கானது) | | 400 |
| | **82 600** | **82 600** |

**மேலதிகத் தகவல்கள் :**

**31.03.2018 இல் முடிவடைந்த வருடத்திற்கான நிதிக்கூற்றுக்களைத் தயாரிப்பதற்கு பின்வரும் விடயங்களில் சீராக்கங்கள் மேற்கொள்ளப்படல் வேண்டும்.**

(i) 31.03.2018 இல் இருப்பின் கிரயமும், தேறிய தேறத்தக்க பெறுமதிகள் பின்வருமாறு :

| | கிரயம் (ரூ.'000) | தேறிய தேறத்தக்க பெறுமதி (ரூ.'000) |
|---|---|---|
| கணினிகள் | 5 000 | 6 000 |
| கையடக்கத் தொலைபேசிகள் | 3 000 | 2 500 |

(ii) கொள்வனவு மற்றும் விற்பனைப் பெறுமதிகளில் 15% பெறுமதி சேர்க்கப்பட்ட வரி (VAT) உள்ளடங்கியுள்ளது.

(iii) கம்பனியின் வணிக நிலையமானது வாடகைக்கு எடுக்கப்பட்ட கட்டடமொன்றில் நடாத்திச் செல்லப்படுவதுடன், 01.04.2017 இலிருந்து இதன் வருடாந்த வாடகை ரூபா 600 000 என ஏற்றுக்கொள்ளப்பட்டு, 2 வருடங்களுக்கான வாடகை ஒரே தடவையில் செலுத்தப்பட்டுள்ளது.

(iv) 31.03.2018 இல் முடிவடையும் வருடத்திற்கு பணிப்பாளர்களுக்கு எரிபொருள் மற்றும் தொலைபேசிக் கொடுப்பனவாக ரூபா 1 200 000 செலுத்தப்பட்டு அத்தொகை நிர்வாகச் செலவில் உள்ளடக்கப்பட்டுள்ளது. எரிபொருளுக்காக மேலும் ரூபா 300 000 பணிப்பாளர்களுக்கு செலுத்த வேண்டும்.

(v) ஆதனம் பொறி மற்றும் உபகரணங்களின் உள்ளடக்கமும் அதனுடன் இணைந்த ஏனைய தகவல்களும் கீழே தரப்பட்டுள்ளன.

| சொத்து | கிரயம்/ நியாயப் பெறுமதி **01.04.2017 இல்** (ரூ.'000) | திரண்ட தேய்வு **01.04.2017இல்** (ரூ.'000) | பயன்படு ஆயுட்காலம் (வருடங்கள்) |
|---|---|---|---|
| காணி | 15 000 | - | - |
| மோட்டார் வாகனம் (குத்தகை முறையில் கொள்வனவு செய்யப்பட்டது) | 12 000 | 2 400 | 5 |
| அலுவலக உபகரணங்கள் | 2 000 | 500 | 8 |
| தளபாடங்கள் | 1 000 | 400 | 5 |
| | 30 000 | 3 300 | |

ஆதனம் பொறி மற்றும் உபகரணங்களுக்கு நேர் கோட்டு முறையில் தேய்விடப்படுகின்றது. நடைமுறை ஆண்டிற்கான பெறுமானத் தேய்வு ஏற்பாடு செய்யப்படவில்லை. இச்சொத்துக்களுக்கு இழிவுப் பெறுமதி எதுவுமில்லை எனக்கருதவும்.

(vi) 31.03.2018 இல் கம்பனிக்குச் சொந்தமான காணி ரூபா 10 000 000 க்கு தொழில்சார் மதிப்பீட்டாளர் ஒருவரினால் மீள்மதிப்பீடு செய்யப்பட்டது. 31.03.2016 இல் இக்காணியானது முதல் தடவையாக மீள்மதிப்பீடு செய்யப்பட்டு ரூபா 3 000 000 மிகையொன்று அறிக்கையிடப்பட்டுள்ளதுடன், அதனையே மீள்மதிப்பீட்டு ஒதுக்கக் கணக்கு காட்டுகின்றது.

(vii) கம்பனியிடமுள்ள மோட்டார் வாகனமானது 01.04.2016 இல் குத்தகை முறையின் கீழ் பெற்றுக்கொள்ளப்பட்டது. இம்மோட்டார் வாகனமானது பொருட்களின் விநியோகத்திற்காகப் பயன்படுத்தப்படுகின்றது. குத்தகைக் காலம் 4 வருடங்களாகும். 31.03.2018 இல் முடிவடைந்த வருடத்தின் இறுதியில் செலுத்திய வருடாந்த குத்தகைக் கட்டணம் ரூபா 3 750 000 ஆனது குத்தகைக் கடன் கொடுத்தோர் கணக்கில் வரவு வைக்கப்பட்டுள்ளது. நடப்பாண்டின் குத்தகை வட்டியானது கணக்குகளில் பதியப்படவில்லை என்பதுடன், நடப்பாண்டிற்கும் எதிர்வரும் இரண்டு வருடங்களுக்குமான குத்தகை வட்டி பின்வருமாறு.

| வருடம் | குத்தகை வட்டி (ரூ.'000) |
|---|---|
| 2017/2018 | 900 |
| 2018/2019 | 600 |
| 2019/2020 | 300 |

(viii) கம்பனியானது நடைமுறையாண்டிலிருந்து ஒரு வருட உத்தரவாதத்துடன் பொருட்களை விற்பனை செய்கின்றது. இதற்காக 31.03.2018 இல் ரூபா 500 000 ஒதுக்கமொன்று மேற்கொள்ளப்படல் வேண்டும் என்ற நம்பகத்தன்மையுடன் மதிப்பீடு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

(ix) ஊழியர் சேமலாப நிதி (EPF) க்காக வேலை வழங்குவோர் மற்றும் ஊழியர் பங்களிப்பு முறையே 15% மற்றும் 10% ம் ஆகும். ஊழியர் நம்பிக்கை நிதிக்கான (ETF) வேலை வழங்குநர் பங்களிப்பு 3%மாகும். இந்நிதிகள் இரண்டிற்குமான வேலை வழங்குநர்களின் முழு வருடத்திற்குமான பங்களிப்பு இதுவரை ஒதுக்கப்படவோ அல்லது நிதிகள் இரண்டிற்குமான பணக் கொடுப்பனவுகளோ மேற்கொள்ளப்படவில்லை.

(x) வருமான வரியினுள் கடந்த வருடத்திற்காகச் செலுத்தப்பட்ட ரூபா 600 000 வும், நடைமுறையாண்டின் முதல் மூன்று காலாண்டிற்குமான கொடுப்பனவும் உள்ளடக்கப்பட்டுள்ளது. நடைமுறையாண்டின் இறுதிக் காலாண்டுக்கான வருமான வரிப் பொறுப்பு ரூபா 700 000 மாக மதிப்பீடு செய்யப்பட்டுள்ளது. இத்தொகைக்கு இதுவரை எவ்விதச் சீராக்கங்களும் மேற்கொள்ளப்படவில்லை.

(xi) 31.03.2018 இல் ரூபா 200 000 மீதியினைக் கொண்ட கடன்பட்டோர் ஒருவர் 25.04.2018 இல் முறிவடைந்துள்ளதாக நீதிமன்றம் அறிவித்துள்ளது. 31.03.2018 இல் முடிவடைந்த வருடத்திற்கான வியாபார வருமதிகளில் எதிர்பார்க்கப்படும் நட்டத்திற்கான ஏற்பாடு செய்தல் ரூபா 100 000 என மதிப்பிடப்பட்டுள்ளது. நடைமுறையாண்டிற்கான நிதிக் கூற்றுக்கள் 15.05.2018 இல் பணிப்பாளர்களால் அனுமதிக்கப்பட்டது.

(xii) 31.03.2018 இல் பணிப்பாளர்களால் நிறுத்தி வைத்த வருவாயினைப் பயன்படுத்தி, ரூபா 2 500 000 பொது ஒதுக்கமொன்றை உருவாக்குவதற்கு தீர்மானித்துள்ளதுடன், சாதாரண பங்காளர்களுக்கு ரூபா 2 000 000 வை பங்கிலாபமாகச் செலுத்துவதற்கான முன்மொழிவினையும் வழங்கியுள்ளனர்.

(xiii) 31.03.2018 இல் காணப்படுகின்ற வங்கிக் கடன் மீதியில் 31.03.2019 இல் முடிவடையும் வருடத்தினுள் செலுத்த வேண்டிய கடனின் அளவு ரூபா 500 000 ஆகும்.

**வேண்டப்படுவது :**

பிரசுரிப்பதற்கு ஏற்றவாறு வரையறுக்கப்பட்ட "திவ்யா" பொதுக் கம்பனியின் பின்வரும் நிதிக்கூற்றுக்களை குறிப்புகள் உள்ளடங்கலாக தயாரிக்குக.

**(1)** 31.03.2018 இல் முடிவடைந்த வருடத்திற்கான இலாபம் அல்லது நட்டம் மற்றும் ஏனைய முற்றுமடங்கிய வருமானக் கூற்று

**(2)** 31.03.2018 இல் முடிவடைந்த வருடத்திற்கான உரிமையாண்மை மாற்றங்களிற்கான கூற்று

**(3)** 31.03.2018 இல் உள்ளவாறான நிதிநிலைமைக் கூற்று **(20 புள்ளிகள்)**

**2.** (அ) கம்பனியொன்று X எனும் பொருளை உற்பத்தி செய்து விற்பனை செய்கின்றது. அப்பொருளின் அலகொன்றிற்கான மாறும் கிரயம் ரூபா 140 ஆகும். பங்களிப்பு விற்பனை வீதம் 30% ஆகும். நடைமுறை செயற்பாட்டு மட்டம் 1 800 அலகுகளாகும் என்பதுடன், நிறுவனத்தின் மொத்த நிலையான கிரயம் ரூபா 90 000 ஆகும்.

**வேண்டப்படுவது :**

**(1)** அலகொன்றிற்கான பங்களிப்பு

**(2)** சமப்பாட்டுப் புள்ளியில் அலகுகளின் எண்ணிக்கை

**(3)** நடைமுறை செயற்பாட்டு மட்டத்தில் இலாபம் அல்லது நட்டம்

**(4)** சமப்பாட்டுப்புள்ளியினை வரைபடத்தில் பருமட்டாக வரைந்து நடைமுறை செயற்பாட்டு மட்டத்தில் பின்வரும் விடயங்களைக் காட்டுக.

(அ) பாதுகாப்பு எல்லை (அலகுகளில்)

(ஆ) விற்பனை வருமானம்

**(5)** விற்பனை விலையில் 50% பங்களிப்பினைப் பெற்றுக்கொள்வதற்கு அலகொன்றை விற்கவேண்டிய விலை **(05 புள்ளிகள்)**

(ஆ) வரையறுக்கப்பட்ட அரலிய பொதுக்கம்பனியானது பாதணிகளை உற்பத்தி செய்து விற்பனை செய்கிறது. இங்கு தயாரிப்பு மற்றும் முடிவுறுத்தல் எனும் இரு கிரய நிலையங்கள் காணப்படுகின்றன. 2018 மார்ச் மாதத்தில் இக்கம்பனியினால் பாடசாலைப் பிள்ளைகளுக்கு 100 பாதணிச்சோடிகளை உற்பத்தி செய்தல் தொடர்பிலான தகவல்கள் பின்வருமாறு.

(i) மூலப்பொருள் தொடர்பான தகவல்கள் :

| விபரம் | உச்ச பாவனை | இழிவுப் பாவனை | சராசரிப் பாவனை |
|---|---|---|---|
| நாளொன்றிற்கான மூலப்பொருள் பாவனை (அலகுகள்) | 120 | ? | 100 |
| விநியோகக் காலம் (நாட்கள்) | ? | 10 | 15 |

| திகதி | விபரம் | அளவு (அலகு) | அலகு விலை (ரூபா) |
|---|---|---|---|
| 01/03 | கொள்வனவுகள் | 1 000 | 80 |
| 10/03 | விநியோகம் | 800 | |
| 15/03 | கொள்வனவுகள் | 1 000 | 100 |
| 20/03 | விநியோகம் | 800 | |
| 29/03 | கொள்வனவுகள் | 1 000 | 120 |

* மார்ச் 01 இல் மீதி சரக்கிருப்புக்கள் எதுவும் காணப்படவில்லை.
* இருப்பு வழங்கலை விலையிடுவதற்கு முதல் உள் முதல் வெளி முறை (FIFO) பயன்படுத்தப்படுகின்றது.
* நிதியாண்டினுள் உற்பத்திக்காக விநியோகிக்கப்பட்ட அனைத்து மூலப்பொருட்களும் உற்பத்திக்காகப் பயன்படுத்தப்பட்டன.

(ii) ஊழியர் சம்பளம் தொடர்பான தகவல்கள்:

| ஊழியர் பெயர் | ஊழியர் வகை | அடிப்படை சம்பளம் (ரூ) | ஊக்குவிப்புக் கொடுப்பனவு (ரூ) | மேலதிக நேரக் கொடுப்பனவு (ரூ) | நலன்புரிப் பங்களிப்புக் கழிப்பனவு (ரூ) |
|---|---|---|---|---|---|
| காஞ்சனா | உற்பத்தி ஊழியர் | 30 000 | 5 000 | - | 1 000 |
| சமந்தி | உற்பத்தி ஊழியர் | 30 000 | 5 000 | - | 1 000 |
| லக்ஷான் | உற்பத்தி அலுவலக உதவியாளர் | 23 600 | - | 2 000 | 1 000 |

(iii) உற்பத்தி மேந்தலைக் கிரயம் தொடர்பான தகவல்கள்:

| உருப்படிகள் | மொத்தம் | ஒன்றிணைத்தல் பகுதி | முடிவுறுத்தல் பகுதி |
|---|---|---|---|
| நேரில் கூலி (ரூபா) | 25 600 | | |
| நேரில் மூலப்பொருள் (ஒதுக்கியது) (ரூபா) | 26 400 | 11 200 | 15 200 |
| மின்சாரம் - வெளிச்சத்திற்கானது (ரூபா) | 60 000 | | |
| வாடகை (ரூபா) | 108 000 | | |
| தளப்பரப்பு (சதுர அடி) | 6 000 | 2 000 | 4 000 |
| இயந்திர மணித்தியாலங்கள் | 2 000 | 2 000 | - |
| நேர் ஊழிய மணித்தியாலங்கள் | 2 800 | | 2 800 |

* நேரில் கூலியானது ஒன்றிணைத்தல் மற்றும் முடிவுறுத்தல் பகுதிகளுக்கிடையே சமமாகப் பகிர்வு செய்யப்படும்.
* ஒன்றிணைத்தல் பகுதியில் இயந்திர மணித்தியால அடிப்படையிலும், முடிவுறுத்தல் பகுதியில் நேர் ஊழிய மணித்தியால அடிப்படையிலும் மேந்தலைக் கிரயத்தினை உறிஞ்சுதல் செய்யப்படும்.
* ஒரு பாதணிச் சோடியினை உற்பத்தி செய்வதற்கு இயந்திர மணித்தியாலங்கள் இரண்டும், நேர் ஊழிய மணித்தியாலங்கள் மூன்றும் பயன்படுத்தப்படும்.

**வேண்டப்படுவது :**

**(1)** மறு கட்டளை மட்டம்
**(2)** உச்ச இருப்பு மட்டம்
**(3)** பயன்படுத்திய மூலப்பொருளுக்கான கிரயம்
**(4)** நேர் கூலிக்கிரயம்
**(5)** ஒன்றிணைத்தல் மற்றும் முடிவுறுத்தல் பகுதிகளின் மேந்தலை கிரய பகுப்பாய்வு அட்டவணை
**(6)** ஊழிய, இயந்திர மணித்தியாலமொன்றிற்கான மேந்தலை உறிஞ்சுதல் வீதம்
**(7)** பாதணிகளின் சோடியொன்றிற்கான மொத்த உற்பத்தி கிரயம்

(15 புள்ளிகள்)
(மொத்தம் 20 புள்ளிகள்)

**3.** (அ) 01.01.2018 இல் சாரங்கன் ரூபா 100 000 வை பயன்படுத்தி "காரியாலய போக்குவரத்து சேவை" எனும் பெயரில் போக்குவரத்துச் சேவை வணிகமொன்றை ஆரம்பித்ததுடன், 31.03.2018 இல் முடிவடைந்த மூன்று மாதங்களுக்கான போக்குவரத்து தொடர்பான தகவல்கள் கீழே தரப்பட்டுள்ளன :

01/01 - மூன்று மாதங்களுக்கான பற்றுச் சீட்டுக்களை அச்சடிப்பதற்கான கொடுப்பனவு ரூபா 5 000

02/01 - சாரங்கன் தனிப்பட்ட முறையில் பயன்படுத்திய ரூ. 1 200 000 பெறுமதி கொண்ட வாகனத்தை வணிகத்தில் ஈடுபடுத்தினார் (அதன் பயன்படு ஆயுட்காலம் 10 வருடங்கள் எனவும், மற்றும் அதற்கு எஞ்சிய பெறுமதி எதுவுமில்லை எனவும் மதிப்பிடப்பட்டது)

07/02 - சாரங்கன் தனிப்பட்ட முறையில் சென்ற சுற்றுலாவொன்றிற்காக ஏற்பட்ட ரூபா 10 000 எரிபொருட் செலவினை வணிகம் செலுத்தியிருந்தது.

10/02 - பெற்ற ஏனைய வருமானங்கள் ரூபா 50 000

07/03 - வாகனம் பழுதுபார்த்தல் கிரயம் ரூபா 20 000
(இதில் ரூபா 5 000 இது வரை செலுத்தப்படவில்லை)

31/03 - முதல் காலாண்டிற்கான போக்குவரத்துச் சேவை வருமானமாக ரூபா 600 000 பெறப்பட்டது. முதல் காலாண்டிற்கு வணிகம் வழங்கிய போக்குவரத்துச் சேவைக்கான எரிபொருட் செலவு ரூபா 200 000 ஆகக் காணப்பட்டதுடன், அதில் ரூபா 150 000 செலுத்தப்பட்டிருந்தது.

31/01 - மாதம் ரூபா 25 000 வீதம் சாரதிக்காக செலுத்திய சம்பளம் ரூபா 75 000 ஆகும்.

**வேண்டப்படுவது :**

**(1)** மேலே தரப்பட்ட கொடுக்கல் வாங்கல்களின் தாக்கங்களை + , - குறியீட்டுடனும் பெறுமதிகளுடனும் கீழே தரப்பட்டுள்ள மாதிரிக்கு சமமான மாதிரியினைப் பயன்படுத்தி முன்வைக்க.

| திகதி | சொத்துகள் | பொறுப்புக்கள் | உரிமையாண்மை |
|---|---|---|---|
| | | | |

**(2)** 31.03.2018 இல் முடிவடைந்த மூன்று மாதங்களுக்கான வருமானக் கூற்று **(05 புள்ளிகள்)**

(ஆ) (i) சோமசுந்தரம் வணிகத்தின் 2018 மார்ச் மாதத்திற்கான காசுப் பெறுவனவு மற்றும் காசுக் கொடுப்பனவு நாளேடுகளிலிருந்து பிரித்தெடுக்கப்பட்டவைகள் கீழே தரப்படுகின்றன:

**காசுப் பெறுவனவு**

| திகதி | விபரம் | காசோலை இல. | கொடுத்த கழிவு (ரூ) | பெறுமதி (ரூ) |
|---|---|---|---|---|
| 01/03 | விற்பனை | 250250 | - | 80 000 |
| 10/03 | சசியிடமிருந்து பெற்றது | 375750 | 800 | 9 200 |
| 28/03 | கட்டட வாடகை | - | - | 10 000 |
| | மொத்தம் | | 800 | 99 200 |

**காசுக் கொடுப்பனவு**

| திகதி | விபரம் | காசோலை இல. | பெற்ற கழிவு (ரூ) | பெறுமதி (ரூ) |
|---|---|---|---|---|
| 08/03 | சிரிமலுக்கு செலுத்தியது | 301302 | 1 500 | 18 500 |
| 12/03 | சம்பளம் செலுத்தியது | 301303 | - | 10 000 |
| 20/03 | ஜெசிதாவிற்குச் செலுத்தியது | 301305 | 2 000 | 48 000 |
| 28/03 | கொள்வனவுகள் | 301306 | - | 40 000 |
| | மொத்தம் | | 3 500 | 116 500 |

(ii) 31.03.2018 இல் முடிவடைந்த மாதத்திற்கான வங்கிக் கூற்று

| திகதி | விபரம் | வரவு (ரூ.) | செலவு (ரூ.) | மீதி (ரூ.) |
|---|---|---|---|---|
| 01/03 | மீதி | - | - | 25 000 |
| 01/03 | வைப்பு - காசோலை 250250 | - | 80 000 | 105 000 |
| 12/03 | காசோலை - 301303 | 10 000 | - | 95 000 |
| 28/03 | வைப்பு - காசு | - | 10 000 | 105 000 |
| 29/03 | காசோலை - 301306 | 40 000 | - | 65 000 |
| 30/03 | வங்கிக் கட்டணம் | 1 000 | - | 64 000 |
| 30/03 | வைப்பு - (குமாரி) 17973 | - | 22 000 | 86 000 |
| 31/03 | காப்புறுதி தவணைக் கட்டணம் | 6 000 | - | 80 000 |

(iii) சோமசுந்தரம் வணிகத்தின் 01.03.2018 இல் காணப்பட்ட மீதிகளும், மார்ச் மாதத்திற்கான மூல ஏடுகளிலிருந்து பிரித்தெடுக்கப்பட்டவைகளும் பின்வருமாறு

(ரூபா)

| விபரம் | சிசில் | குமாரி | அமல் |
|---|---|---|---|
| 01.03.2018 கடன்பட்டோர் மீதி | 15 000 | 48 000 | 1 200 |
| விற்பனை நாளேடு | 30 000 | 60 000 | - |
| உட்திரும்பல் நாளேடு | 800 | 2 200 | - |
| பொது நாளேடு (அறவிடமுடியாக் கடன் பதிவழிப்பு) | 1 500 | - | 500 |
| | **சிறிமல்** | **ஜயசிரி** | **பிரேம்** |
| 01.03.2018 கடன் கொடுத்தோர் மீதி | 30 000 | 53 000 | 65 000 |
| கொள்வனவு நாளேடு | 20 000 | 80 000 | - |
| வெளித்திரும்பல் நாளேடு | 7 000 | 3 000 | - |

**மேலதிகத் தகவல்கள் :**

* 31.03.2018 இல் காசுக்கட்டுப்பாட்டுக் கணக்கின் மீதி ரூபா 16 700 ஆகும்.
* காசுக் கொடுப்பனவு நாளேட்டின் ஏனைய செலவுகள் நிரலின் மொத்தம் ரூபா 10 000 ஆனது காசுக்கட்டுப்பாட்டுக் கணக்கில் ரூபா 1 000 என பதியப்பட்டிருந்தது.
* 20.03.2018 இல் வழங்கப்பட்ட காசோலையொன்று மறுக்கப்பட்டதாக வங்கி அறிவித்துள்ளது. கடன் கொடுத்தோர் பெற்ற கழிவானது இரத்துச் செய்யப்பட்டதாக கடன் கொடுத்தோர் அறிவித்துள்ளார்.

**வேண்டப்படுவது :**

(1) 31 மார்ச் 2018 இல் காசுக் கட்டுப்பாட்டுக் கணக்கின் சரியான மீதி

(2) 2018 மார்ச் மாதத்திற்கான வங்கி இணக்கக் கூற்று

(3) 2018 மார்ச் மாதத்திற்கான கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கும் கடன் கொடுத்தோர் கட்டுப்பாட்டுக் கணக்கும்.

**(15 புள்ளிகள்)**

(மொத்தம் **20** புள்ளிகள்)

04. (அ) நிசாந்தன் என்பவரினால் நடாத்திச் செல்லப்படுகின்ற சித்திர ஆக்கங்களை கொள்வனவு செய்து விற்பனை செய்கின்ற வணிகத்தின் புத்தகங்களிலிருந்து பெயர்த்தெடுக்கப்பட்ட மீதிகளும், கொடுக்கல் வாங்கல்களின் சிலவும் கீழே தரப்பட்டுள்ளன:

| **01.04.2018 இல் மீதி** | **ரூ.'000** |
|---|---|
| காசு | 180 |
| வியாபாரக் கொடுக்குமதிகள் | 60 |
| செல்மதி VAT | 15 |
| செல்மதி மின்சாரக் கட்டணம் | 5 |

**2018 ஏப்ரல் மாதத்தினுள் இடம்பெற்ற காசுக் கொடுப்பனவுகளும் மற்றும் கடன் கொள்வனவுகளும் பின்வருமாறு:**

02/04 - காப்புறுதிக்கட்டணம் செலுத்தியது ரூபா 10 000 (உறுதிச்சீட்டு (voucher) இலக்கம் 081, காசோலை இலக்கம் 623750)

03/04 - செல்மதி மின்கட்டணம் உட்பட மின்சாரக் கட்டணமாக ரூபா 11 000 செலுத்தப்பட்டது. (உறுதிச்சீட்டு இலக்கம் 081, காசோலை இலக்கம் 623751)
ஏப்ரல் மாதத்திற்கான மின்சாகரக் கட்டணம் ரூபா 6 000 ஆகும்.

06/04 - சித்திர ஆக்கங்களின் கொள்வனவுகள் ரூபா 160 000 (உறுதிச்சீட்டு இலக்கம் 083, காசோலை இலக்கம் 623752)

08/04 - வசந்தனிடமிருந்து கடனுக்குக் கொள்வனவு செய்யப்பட்ட சித்திர ஆக்கத்தின் பெறுமதி ரூபா 85 000. வியாபாரக் கழிவு ரூபா 5 000 ஆகும். (பட்டியல் (Invoice) இலக்கம் 072)

15/04 - ஆகாஸிடமிருந்து ரூபா 60 000 விற்கு சித்திர ஆக்கமொன்று கடனுக்குக் கொள்வனவு செய்யப்பட்டது. (பட்டியல் இலக்கம் 073)

20/04 - ஆகாஸின் கடனில் ரூபா 50 000 வை செலுத்தியபோது பெற்ற கழிவு ரூபா 2 000 ஆகும். (உறுதிச்சீட்டு இலக்கம் 084, காசோலை இலக்கம் 623753)

25/04 - வசந்தனின் கடனில் ரூபா 80 000 வை செலுத்தியபோது பெற்ற கழிவு ரூபா 3 000 ஆகும். (உறுதிச்சீட்டு இலக்கம் 085, காசோலை இலக்கம் 623754)

**மேலதிகத் தகவல்கள் :**

**(1)** மேற்குறிப்பிட்ட வணிகமானது VAT இற்காக பதிவுசெய்யப்பட்டுள்ளதுடன், கொள்வனவு, விற்பனையில் VAT வீதம் 15% ஆகும்.
**(2)** மேலே தரப்பட்ட கொள்வனவு விற்பனைகளில் VAT உள்ளடக்கப்படவில்லை.
**(3)** 30 ஏப்ரல் 2018 இல் காசுப் பெறுவனவு நாளேட்டின் மொத்தம் ரூபா 400 000 ஆகும்.

**வேண்டப்படுவது :**

**(1)** மேலே தரப்பட்ட கொடுக்கல் வாங்கல்களை பின்வரும் நாளேடுகளில் (மூலப்பதிவேடுகள்) பதிவுசெய்க.
(i) காசு கொடுப்பனவு நாளேடு
(ii) கொள்வனவு நாளேடு

**(2)** பொது பேரேட்டில் பின்வரும் கணக்குகள்
(i) காசுக் கட்டுப்பாட்டுக் கணக்கு
(ii) கொள்வனவுக் கணக்கு
(iii) வியாபாரக் கொடுக்குமதிகள் கணக்கு
(iv) வருமதி VAT கணக்கு **(10 புள்ளிகள்)**

(ஆ) சிறுவர்களின் வாசிப்புப் பழக்கத்தை ஊக்கப்படுத்தும் நோக்கில் 01.04.2017 இல் "அறிவுச்சுடர்" எனும் பெயரில் சிறுவர் கழகமொன்று ஆரம்பிக்கப்பட்டது.
அங்கத்தவரொருவரின் மாதாந்த சந்தா ரூபா 20. ஆயுள் சந்தா ரூபா 2 000 ஆகும். ஆயுள் சந்தா கிடைத்த ஆண்டிலிருந்து 10 வருடங்களினுள் வருமானமாக இனம் காணப்படல் வேண்டும்.

(i) கழகத்தின் ஆரம்ப அங்கத்தவர்கள் 25 பேர்கள் என்பதுடன் இவர்களில் 10 பேர் ஆயுள் அங்கத்தவர்களாவர்.

(ii) 2017/2018 வருடத்திற்கு ஆரம்பத்திலிருந்த அங்கத்தவர்களில் 5 பேர்கள் 10 மாதங்களுக்கான சந்தாவை மாத்திரமே செலுத்தியிருந்தனர். ஏனைய அங்கத்தவர்கள் முழு வருடத்திற்குமான சந்தாவை செலுத்தியிருந்தனர்.

(iii) 01.10.2017 இல் மேலும் 10பேர்கள் அங்கத்துவத்தை பெற்றுள்ளதுடன், அவர்கள் முழுவருடத்திற்குமான சந்தாவை செலுத்தியிருந்தனர்.

(iv) கழகத்திற்கு 01.10.2017 இல் ரூபா 20 000 காசும் ரூபா 50 000 பெறுமதியான தளபாடங்களும் நன்கொடையாக கிடைக்கப்பெற்றது. தளபாடங்களுக்கு வருடாந்தம் கிரயத்தில் 10% ம் நேர்கோட்டு முறையில் தேய்விடப்படல் வேண்டும்.

(v) கழகத்தை நடாத்துவதற்கான கட்டடத்திற்கான மாதாந்த வாடகை ரூபா 1 000 என்பதுடன், வருடத்தினுள் 10 மாதங்களுக்கான வாடகை மாத்திரமே செலுத்தப்பட்டுள்ளது.

(vi) வருடத்தினுள் ரூபா 1 500 பெறுமதியான சஞ்சிகைகள் கொள்வனவு செய்யப்பட்டுள்ளதுடன், மின்சாரக் கட்டணமாக ரூபா 3 000 வும் எழுது பொருட் செலவாக ரூபா 2 000 வும் செலுத்தப்பட்டுள்ளது.

(vii) கழக அங்கத்தவர்களின் எழுத்தாற்றலை மேம்படுத்துவதற்காக சஞ்சிகையொன்று வெளியிடப்பட்டுள்ளதுடன், அதற்கான அச்சிடல் மற்றும் ஏனைய செலவுகளாக ரூபா 5 000 ஏற்பட்டுள்ளது. சஞ்சிகைக்கான அனுசரணை வியாபார விளம்பரங்களின் மூலம் ரூபா 4 000 மும் சகல சஞ்சிகைகளையும் விற்பனை செய்ததன் மூலம் ரூபா 4 000 மும் கிடைக்கப்பெற்றுள்ளது.

**வேண்டப்படுவது :**

**(1)** 31.03.2018 இல் முடிவடைந்த வருடத்திற்கான வருமானக் கூற்று

**(2)** சந்தா தொடர்பான பிரித்தெடுக்கப்பட்ட பகுதிகளுடன் **31.03.2018** இல் நிதிநிலைமைக் கூற்றில் பொழிப்பினைத் தருக.

**(05** புள்ளிகள்**)**

(இ) வரையறுக்கப்பட்ட ஜெயா பொதுக்கம்பனியின் **31.03.2017** இல் ஆதனம் பொறி மற்றும் உபகரணங்கள் தொடர்பான தகவல்கள் கீழே தரப்பட்டுள்ளன.

**(ரூ.'000)**

| சொத்துக்கள் | கிரயம்/மீள் மதிப்பீட்டுப் பெறுமதி (ரூ.'000) | கொண்டுசெல் மீதி (ரூ.'000) | பயன்படு ஆயுட்காலம் (வருடங்கள்) | எஞ்சிய பெறுமதி (ரூ.'000) |
|---|---|---|---|---|
| காணி | 5 000 | - | - | - |
| கட்டடம் | 5 400 | 1 500 | 40 | 200 |
| இயந்திரங்கள் | 2 200 | 800 | 5 | 200 |
| மோட்டார் வாகனங்கள் | 1 500 | 1 080 | 10 | 100 |

- கம்பனியானது தேய்வு செய்யக்கூடிய சகல சொத்துக்களையும் நேர்கோட்டு முறையில் பெறுமானத் தேய்விடுகின்றது.
- 31.03.2018 இல் முடிவடைந்த வருடத்தினுள் பின்வரும் கொடுக்கல் வாங்கல்கள் இடம்பெற்றுள்ளன.

**(i)** கம்பனிக்குரிய காணி **01.04.2017** இல் ரூபா 5 500 000 விற்கு மீள்மதிப்பீடு செய்யப்பட்டது. இரண்டு வருடங்களிற்கு முன்னர் காணி மீள்மதிப்பீட்டின்போது ரூபா 300 000 மீள்மதிப்பீட்டு குறையொன்று அறிக்கையிடப்பட்டுள்ளது.

**(ii)** **01.04.2017** இல் ரூபா 500 000 செலவில் கட்டடமானது நவீனமயப்படுத்தப்பட்டது. இதன் காரணமாக கட்டடத்தை இன்னும் 20 வருடங்களுக்கு பயன்படுத்த முடியும் எனவும், இதன் எஞ்சிய பெறுமதியில் எந்தவித மாற்றமும் இல்லை எனவும் மதிப்பீடு செய்யப்பட்டுள்ளது.

**(iii)** **01.04.2017** இல் குத்தகை அடிப்படையில் இயந்திரமொன்று கொள்வனவு செய்யப்பட்டுள்ளதுடன் அது தொடர்பான தகவல்கள் பின்வருமாறு :

| | | |
|---|---|---|
| இயந்திரத்தின் நியாயப் பெறுமதி | ரூ. | 1 200 000 |
| ஆரம்ப வைப்பு | ரூ. | 400 000 |
| குத்தகை தவணைக் கட்டணம் | ரூ. | 300 000 |
| குத்தகைக் காலம் | | 4 வருடங்கள் |
| இயந்திரத்தின் பயன்தரு ஆயுட்காலம் | | 5 வருடங்கள் |
| இயந்திரத்தின் எஞ்சிய பெறுமதி | ரூ. | 200 000 |

* முதலாவது மற்றும் இரண்டாவது குத்தகை தவணைக் கட்டணங்களுள் உள்ளடக்கப்பட்டுள்ள குத்தகை வட்டி முறையே ரூபா 160 000 மற்றும் ரூபா 140 000 ஆகும்.

* முதலாவது தவணைக் கட்டணம் 31.03.2018 இல் செலுத்தப்பட்டுள்ளது.

* சகல நிதியாண்டு முடிவிலும் குத்தகைத் தவணைக் கட்டணம் செலுத்தப்பட வேண்டும்.

**வேண்டப்படுவது :**

**(1)** 31.03.2018 இல் முடிவடையும் வருடத்திற்கான இலாபம் அல்லது நட்டம் மற்றும் ஏனைய முற்றுமடங்கிய வருமானக் கூற்றில் பிரித்தெடுக்கப்பட்ட பகுதிகளை பின்வருமாறு காட்டவும்.

| | |
|---|---|
| விநியோகக் கிரயம் | ............... |
| நிர்வாக செலவுகள் | ............... |
| ஏனைய செலவுகள் | ............... |
| நிதிக்கிரயம் | ............... |
| **ஏனைய முற்றுமடங்கிய வருமானம்** | |
| காணி மீள் மதிப்பீட்டு மிகை | ............... |

**(2)** 31.03.2018 இல் உள்ளபடியான நிதி நிலைமைக் கூற்றில் குத்தகைப் பொறுப்பு தொடர்பில் காட்டவேண்டிய சகல பிரித்தெடுக்கப்பட்ட பகுதிகள்

**(05** புள்ளிகள்**)**

**(**மொத்தம் **20** புள்ளிகள்**)**

**05.** (அ) ஆஷா, உஷா மற்றும் ரீஸா ஆகியோர் பின்வரும் நிபந்ததைகளுக்கமைய பங்குடமை வணிகமொன்றை நடாத்திச் செல்கின்றனர்.

- ஆஷா, உஷா மற்றும் ரீஸா முறையே 3:2:1 எனும் விகிதத்தில் இலாப நட்டத்தை பகிர்வர்.
- ஆஷா, உஷா மற்றும் ரீஸா முறையே மாதமொன்றிற்கு ரூபா 3 000 மற்றும் ரூபா 4 000 ரூபா 5 000 சம்பளம் பெற உரித்துடையவர்கள்.
- பங்காளர்களின் ஆரம்ப மூலதனத்திற்கு வருடாந்தம் 5% ம் வட்டி வழங்கப்படும்.

01.04.2017 இல் பங்காளர்களின் கணக்குகளின் மீதி பின்வருமாறு :

| | ஆஷா (ரூ.) | உஷா (ரூ.) | ரீஸா (ரூ.) |
|---|---|---|---|
| மூலதனக் கணக்கு | 300 000 | 200 000 | 100 000 |
| நடைமுறைக் கணக்கு | 30 000 | 20 000 | (10 000) |
| 6% கடன் கணக்கு | - | - | 100 000 |

31.03.2018 இல் முடிவடைந்த வருடத்திற்கான வரைபு தேறிய இலாபம் ரூபா 320 000 ஆகும்.

மேலே தரப்பட்ட தேறிய இலாபத்தைக் கணிக்கும்போது பின்வரும் வழுக்களும் விடுபட்டவைகளும் இடம்பெற்றிருந்தன.

(i) ரீஸாவினால் வணிகத்திற்கு வழங்கப்பட்ட கடனுக்கான வட்டி சீராக்கப்படவில்லை.

(ii) பங்காளர்களுக்கு வழங்கப்பட்ட 6 மாதத்திற்கான சம்பளம் ஊழியர் சம்பளக் கணக்கில் உள்ளடக்கப்பட்டிருந்தது.

(iii) பங்குடமையின் வணிகமானது உஷாவிற்கு சொந்தமான கட்டடத்தில் நடாத்திச் செல்லப்படுவதுடன் அதன் மாதாந்த வாடகை ரூபா 10 000 ஆகும். வருடத்தினுள் செலுத்தப்பட்ட கட்டட வாடகை ரூபா 40 000 மாத்திரம் ஏடுகளில் பதிவு செய்யப்பட்டிருந்தது.

(iv) 01.10.2017 இல் வணிகத்திற்குச் சொந்தமான ரூபா 800 000 கொண்டுசெல் மீதி கொண்ட காணியொன்று ரூபா 1000 000 பெறுமதியிடப்பட்டு வழங்கப்பட்டும் காசாக ரூபா 700 000 செலுத்தப்பட்டும் மோட்டார் வாகனமொன்று கொள்வனவு செய்யப்பட்டது. மோட்டார் வாகனமானது வருடாந்தம் 20% ம் நேர்கோட்டு முறையில் தேய்விடப்படுகின்றது. இம்மோட்டார் வாகனத்தைக் கொள்வனவு செய்வதற்காகச் செலுத்திய தொகையினை ஏடுகளில் பதிவு செய்தது தவிர, இக்கொடுக்கல் வாங்கல் தொடர்பில் வேறு எப்பதிவும் மேற்கொள்ளப்படவில்லை. (மோட்டார் வாகனத் தேய்வும் சீராக்கப்படவில்லை.)

(v) 31.03.2018 இல் முடிவடைந்த வருடத்தினுள் ஆஷா, உஷா மற்றும் ரீஸாவினால் முறையே பற்றிக் கொள்ளப்பட்டப் பொருட்கள் ரூபா 8 000, ரூபா 6 000 மற்றும் ரூபா 4 000 இற்கான பதிவுகள் எதுவும் புத்தகங்களில் பதியப்படவில்லை.

(vi) 31.03.2018 இல் ரீஸா பங்குடமை வணிகத்திலிருந்து ஓய்வுபெற்றதுடன் அத்திகதியில் மொத்த நன்மதிப்பு ரூபா 240 000 வாக மதிப்பிடப்பட்டு அதனை மூலதனக் கணக்கினூடாகச் சீராக்குவதற்கும் நன்மதிப்புக் கணக்கினை ஏடுகளில் பேணாதிருப்பதற்கும் தீர்மானிக்கப்பட்டது. ஆஷாவும், உஷாவும் இலாப நட்டங்களை சமமாகப் பகிர்ந்து கொண்டு பங்குடமையைத் தொடர்ந்தும் நடாத்திச் செல்வதற்கும் இணங்கினர். ரீஷாவின் சகல உரிமைகளையும் கடன் கணக்கிற்கு மாற்றுவதற்கும் பங்காளர்கள் இணங்கினர். இது தொடர்பில் எந்தவிதப் பதிவுகளும் ஏடுகளில் பதிவு செய்யப்படவில்லை.

**வேண்டப்படுவது :**

31.03.2018 இல் முடிவடைந்த வருடத்திற்கான பின்வருவனவற்றை தயாரிக்குக.

**(1)** இலாபத்தைச் சீராக்கும் கூற்று
**(2)** இலாப நட்டப் பகிர்வுக் கணக்கு
**(3)** பங்காளர்களின் நடைமுறைக் கணக்குகள்
**(4)** பங்காளர்களின் மூலதனக் கணக்குகள் (10 புள்ளிகள்)

(ஆ) வரையறுக்கப்பட்ட பமிதா உற்பத்திக் கம்பனியின் 31.03.2018 இல் முடிவடைந்த வருடத்திற்கான தகவல்கள் கீழே தரப்பட்டுள்ளன.

(i) 01.04.2017 இல் மூலப்பொருட்களின் இருப்பு ரூபா 80 000 (மூலப்பொருள் - 4000kg) (மூலப்பொருள் கிலோ கிராம் 4000) ரூபா 80 000

(ii) 31.03.2018 இல் முடிவடைந்த வருடத்திற்கான உற்பத்தியுடன் தொடர்புடைய ஏனைய தகவல்கள்:

| | ரூ. |
|---|---|
| மூலப்பொருள் கொள்வனவு (மூலப்பொருள் 50 000 கிலோகிராம்) | 1 000 000 |
| மூலப்பொருள் உட்சுமைக் கூலியும் சுங்கத் தீர்வையும் | 200 000 |
| மொத்த மேந்தலைக் கிரயம் | 5 050 000 |
| உற்பத்தியல்லாத மேந்தலைக் கிரயம் | 800 000 |

(iii) அலகொன்றினை உற்பத்தி செய்வதற்கு மூலப்பொருட்களில் 2 கிலோ கிராம் தேவைப்படுகின்றது.

(iv) அலகொன்றை உற்பத்தி செய்ய ஒரு ஊழிய மணித்தியாலம் தேவைப்படுவதுடன், மணித்தியாலத்திற்கான கொடுப்பனவு ரூபா 100 ஆகும்.

(v) அலகொன்றை உற்பத்தி செய்வதற்கான ஏனைய நேர்ச் செலவுகள் ரூபா 50 ஆகும்.

(vi) 25 000 அலகுகள் வருடத்தினுள் உற்பத்தி செய்துள்ளதுடன், அவற்றுள் 20 000 அலகுகள் ஒவ்வொன்றும் ரூபா 500 வீதம் நிலையான விலைக்கு விற்பனை செய்துள்ளது.

(vii) நிதியாண்டின் ஆரம்பத்திலோ இறுதியிலோ நடைமுறை வேலை இருப்புகள் எதுவும் இருக்கவில்லை.

**வேண்டப்படுவது :**

**(1)** 31.03.2018 இல் மூலப்பொருள் இருப்பின் பெறுமதி
**(2)** 31.03.2018 இல் முடிவடைந்த வருடத்திற்கான மூலக்கிரயம்
**(3)** 31.03.2018 இல் முடிவடைந்த வருடத்திற்கான மொத்த உற்பத்திக்கிரயம்
**(4)** 31.03.2018 இல் முடிவடைந்த வருடத்தினுள் உற்பத்தி செய்த அலகொன்றிற்கான உற்பத்திக் கிரயம்
**(5)** 31.03.2018 இல் முடிவடைந்த வருடத்திற்கான இலாபம் அல்லது நட்டம்

(05 புள்ளிகள்)

(இ) நிறுவனத்தின் மின்சாரத் தேவையினை சூரிய சக்தியின் மூலம் பூர்த்தி செய்வதற்கு எதிர்பார்க்கின்ற கம்பனி சந்தையில் காணப்படுகின்ற "A" எனும் சூரிய சக்தியினால் மின்சாரத்தை உற்பத்தி செய்யக்கூடிய இயந்திரத்தினை கொள்வனவு செய்வது தொடர்பில் கவனம் செலுத்தி வருகின்றது. அந்த இயந்திரத்தைக் கொள்வனவு செய்து பொருத்துவதற்கான மொத்தக் கிரயம் ரூபா 300 000 ஆகும். இதன் மதிப்பிடப்பட்ட பயன்படு ஆயுட்காலம் 5 வருடங்களாகும். மதிப்பிடப்பட்ட இழிவுப்பெறுமதி ரூபா 50 000 ஆகும். நிறுவனத்தின் வருடாந்தச் செயற்பாட்டுச் செலவுகள் ரூபா 100 000 ஆகும். எதிர்வரும் 5 வருடங்களுக்கு மதிப்பிடப்பட்ட சராசரி வருடாந்த செயற்பாட்டுச் செலவுகளும் (தேய்வு உட்பட) 15% த்திற்கான கழிவுக்காரணிகளும் கீழே தரப்பட்டுள்ளன:

| வருடம் | 1 | 2 | 3 | 4 | 5 |
|---|---|---|---|---|---|
| வருடத்திற்குரிய செயற்பாட்டுச் செலவுகள் (தேய்வு உட்பட) | 70 000 | 65 000 | 60 000 | 60 000 | 55 000 |
| 15% இற்கான கழிவுக் காரணிகள் | 0.87 | 0.75 | 0.65 | 0.57 | 0.49 |

**வேண்டப்படுவது :**

**(1)** இச்செயற்றிட்டத்தின் திரும்பப் பெறும் காலம்

**(2)** இச்செயற்றிட்டத்தின் தேறிய நிகழ்காலப் பெறுமதி

**(3)** தேறிய நிகழ்காலப் பெறுமதிக்கேற்ப இயந்திரத்தைக் கொள்வனவு செய்ய வேண்டுமா இல்லையா என்பதைக் காரணத்துடன் பரிந்துரை செய்க.

**(05 புள்ளிகள்)**

(மொத்தம் **20** புள்ளிகள்)

**6.** (அ) 01.04.2017 இல் வணிகக் கருமங்களை ஆரம்பித்த வரையறுக்கப்பட்ட சுகன்யா பொதுக்கம்பனியானது வரி விடுகை பெற்ற கம்பனியொன்றாகும். இக்கம்பனியுடன் தொடர்புடைய தகவல்கள் கீழே தரப்பட்டுள்ளன.

(i) 31.03.2018 இல் நிதிநிலைமைக் கூற்றிலிருந்து பிரித்தெடுக்கப்பட்ட தகவல்கள்:

| | **ரூ.'000** |
|---|---|
| கூறப்பட்ட மூலதனம் - சாதாரண பங்குகள் (பங்கொன்று ரூ, 100) | 1 000 |
| மொத்த உரிமையாண்மை | 1 200 |
| நடைமுறை பொறுப்புக்கள் | 300 |
| நடைமுறையல்லாப் பொறுப்புக்கள் | ? |

(ii) 31.03.2018 இல் முடிவடைந்த வருடத்திற்கான கணக்கீட்டு விகிதங்கள் :

- மொத்த இலாப வீதம் 40%
- தேறிய இலாப வீதம் 20%
- இருப்புப் புரள்வு விகிதம் 4 தடவைகள்
- மொத்தச் சொத்துக்களின் புரள்வு விகிதம் 0.5 தடவைகளாகும்.

(iii) வருடத்தினுள் பங்கிலாபக் கொடுப்பனவோ அல்லது ஒதுக்கத்திற்கான மாற்றல்களோ இடம்பெறவில்லை.

**வேண்டப்படுவது:**

வரையறுக்கப்பட்ட சுகன்யா கம்பனியுடன் தொடர்புடையதாக பின்வருவனவற்றின் தொகைகளைக் கணிக்க.

**(1)** 31.03.2018 இல் முடிவடைந்த வருடத்திற்கான
(i) தேறிய இலாபம்
(ii) விற்பனை
(iii) சாதாரண பங்கொன்றிற்கான உழைப்பு

**(2)** 31.03.2018 இல்
(i) இருப்பு
(ii) நடைமுறை அல்லாத பொறுப்புகள்

**(06 புள்ளிகள்)**

(ஆ) மின்சார உபகரணங்களை விற்பனை செய்யும் இரு கம்பனிகளின் தகவல்கள் கீழே தரப்பட்டுள்ளன:

(i)

| **தகவல்கள்** | **வரையறுக்கப்பட்ட பியுமாலி கம்பனி ரூ.'000** | **வரையறுக்கப்பட்ட ஹியுமாலி கம்பனி ரூ.'000** |
|---|---|---|
| ஆரம்ப வியாபார வருமதிகள் | 600 | 400 |
| இறுதி வியாபார வருமதிகள் | 400 | 600 |
| ஆரம்ப இருப்பு | 300 | 400 |
| இறுதி இருப்பு | 500 | 200 |
| வருடத்தினுள் பொருள் கொள்வனவுகள் | 8 200 | 8 800 |
| கிரயத்தின் அடிப்படையில் மொத்த இலாப வீதம் | 20% | 50% |

(ii) சகல கொள்வனவுகளும் விற்பனைகளும் கடன் அடிப்படையிலேயே இடம்பெற்றுள்ளன.

(iii) ஒரு வருடத்தில் 360 நாட்கள் எனக்கருதவும்.

**வேண்டப்படுவது :**

(1) ஒவ்வொரு கம்பனியினதும் பின்வரும் விகிதங்களைக் கணிப்பிடுக.
   (i) இருப்பினைப் பேணும் காலம்
   (ii) வியாபார வருமதிகளின் புரள்வு விகிதம்

(2) மேலே பெறப்பட்ட கணிப்பீடுகளுக்கேற்ப, குறுங்காலத்தில்
   (i) இருப்பினை விற்பனை செய்கின்ற கம்பனி எது ?
   (ii) வியாபார வருமதிகளிலிருந்து காசினை சேகரிக்கின்ற கம்பனி எது?

(04 புள்ளிகள்)

(இ) தனுஸ் பொதுக்கம்பனியின் 31.03.2018 மற்றும் 31.03.2017 ஆகிய இரு ஆண்டுகளுக்குமான பொழிப்பாக்கப்பட்ட நிதி நிலைமைக் கூற்றுக்கள் கீழே தரப்பட்டுள்ளன :

(ரூ.'000)

| | **31.03.2018** | **31.03.2017** |
|---|---|---|
| **நடைமுறையல்லாச் சொத்துக்கள்:** | | |
| ஆதனம் பொறி மற்றும் உபகரணங்கள் | 15 800 | 14 100 |
| திரண்ட தேய்வு | (1 200) | (800) |
| | 14 600 | 13 300 |
| **நடைமுறைச் சொத்துக்கள்:** | | |
| இருப்பு | 1 500 | 1 400 |
| வியாபார வருமதிகள் | 1 800 | 2 000 |
| காசு மீதி | 410 | 510 |
| | 18 310 | 17 210 |
| **உரிமையாண்மை :** | | |
| கூறப்பட்ட மூலதனம் - சாதாரண பங்குகள் | 9 500 | 8 000 |
| மீள்மதிப்பீட்டு ஒதுக்கம் | 600 | 400 |
| பொது ஒதுக்கம் | 500 | 1 000 |
| நிறுத்திவைத்த வருவாய்கள் | 3 100 | 1 200 |
| | 13 700 | 10 600 |
| **நடைமுறையல்லாப் பொறுப்புகள் :** | | |
| வங்கிக் கடன் | 2 400 | 4 800 |
| **நடைமுறைப் பொறுப்புகள் :** | | |
| வியாபார கொடுக்குமதிள் | 1 750 | 1 600 |
| செலுத்த வேண்டிய வரிகள் | 250 | 100 |
| செலுத்த வேண்டிய நிதிச் செலவுகள் | 210 | 110 |
| | 18 310 | 17 210 |

31.03.2018 இல் முடிவடைந்த ஆண்டுக்கான உரிமையாண்மை மாற்றங்களிற்கான கூற்று (ரூ.'000)

| | சாதாரண பங்குகள் | மீள்மதிப்பீட்டு ஒதுக்கம் | பொது ஒதுக்கம் | நிறுத்தி வைத்த வருவாய் | மொத்தம் |
|---|---|---|---|---|---|
| 01.04.2017 இல் மீதி | 8 000 | 400 | 1 000 | 1 200 | 10 600 |
| பங்கு வழங்கல் | 1 000 | - | - | - | 1 000 |
| ஒதுக்கங்களை மூலதனமாக்கல் | 500 | - | (500) | - | - |
| மொத்த முற்றுமடங்கிய வருமானம் | - | 200 | - | 2 100 | 2 300 |
| செலுத்திய பங்குலாபம் | - | - | - | (200) | (200) |
| 31.03.2018 மீதி | 9 500 | 600 | 500 | 3 100 | 13 700 |

**மேலதிகத் தகவல்கள்:**

(i) வருடத்தினுள் ரூபா 1 200 000 கிரயம் கொண்ட மோட்டார் வாகனமொன்று, ரூபா 100 000 இலாபம் வைத்து, ரூபா 500 000 இற்கு விற்கப்பட்டு புதிய இயந்திரமொன்று கொள்வனவு செய்யப்பட்டது. மோட்டார் வாகன விற்பனையின் மூலமான ஆதாயம் ரூபா 100 000 ஆகும்.

(ii) வருடத்தினுள் வருமான வரியாக ரூபா 125 000 வும், வட்டியாக ரூபா 50 000 வும் செலுத்தப்பட்டது.

**வேண்டப்படுவது :**

தனுஸ் பொதுக்கம்பனியின் 31.03.2018 இல் முடிவடைந்த வருடத்திற்கான LKAS 07 (காசுப்பாய்ச்சல் கூற்று) இற்கேற்ப காசுப்பாய்ச்சல் கூற்று

**(10 புள்ளிகள்)**

**(மொத்தம் 20 புள்ளிகள்)**

* * *